33.

உ

*"Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்யம்வத.—**Speak the Truth.**

"Hitch our Wagon to a Star. "To Thine Own Self be True.




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] உ [God is Love; Knowledge is Power: Om.

ஸத்யமேஜெயம்.—Satyameva Jayati.

புத்தகம் 16] 1907-ம்ஸு ஜூன்மீ. [சஞ்சிகை 2.


# On Change of Times and Adaptability to Circumstances.

"காலமாறு பாட்டையுத்தேசித்துக் காலத்துக்கேற்ற
கோலம் போடல்வேண்டும்."

"ஆரே ஊயுமொன்று சொல்லத் தொடங்கினும் அவ்விடத்துன்
பேரே வரும்; என்ன பேறுபெற்றேன்! பெரு நான்மறையின்
வேரே! மிதிலையின் மின்னொடும் போய்வெய்ய கானடைந்த
காரே! கடல்கொளுந் தச்சிலே வாங்கிய காகுத்தனே."—கம்பராமாயணம்.

"மனதை மாத்திரம் ஏகாக்கிரத்தன்மையில் நிறுத்தி எக்காரியங்களிலானாலும் பிரவேசியுங்கள். யாவும் சித்தியாகும்." "மனதை அம்பாள் மீதில் செலுத்தி ஆரம்பம் செய்வீராகில் முன்னைவிட எண் மடங்கு விசேஷமாகும்"—மௌனசமாதி வாக்கு.

"காலம் கெட்டுக்கிடக்கிறது" என்பார் சிலர். "காலம் மாறுபட்டுப்போயிற்று" என்பார் சிலர். "தர்மம் தலைகவிழ்ந்துபோகும் காலம் வந்துவிட்டது" என்பார் சிலர்

இப்படி ஒவ்வொருவரும் அவரவர் மனநாட்டம் இருந்தபடி ஏதோ ஒன்றைக் குறிப்பிட்டு அதிலுண்டாயிருக்கும் மாறுபாட்டை நோக்கி அதை வற்புறுத்திக்கூறப் பற்பல வார்த்தைகளைப் பலவிதமா யுபயோகிக்கிறார்கள். இப்படி பலர் பலவாறு சொல்வதின் கருத்தையும் காலதேசவர்த்தமானங்களின் தன்மையையும் ஒப்பிட்டுப்பார்த்தால் எல்லாவிதத்திலும் "காலமாறுபாடு" உண்டாய்க் கொண்டுவருவது ஸ்பஷ்டமாயிருக்கிறது. ஜனசார சம்பந்தமாய்ப்பார்த்தால், ஆசார அனுஷ்டானங்கள் கெட்டு அதர்மம் தழைத்து வருகிறது தெரிகிறது. ஜனசமூகவிர்த்திக்கு ஆணிவேர் போன்றது "விவாக தர்மமாம்." அது நமக்குள் "ஆத்மவிவாகம்" என்றுசொல்லும் உயர்பாவத்துக்கேற்றபடி பூர்வீகத்திலுள்ள நமது இருஷிகளால் அமைக்கப்பட்டுள்ளது. ஆணும் பெண்ணும் கூடி இல்லறம் நடத்தி பிரஜா விருத்திசெய்து பிரவிர்த்தி மார்க்கத்திலிருக்கையிலே, அம்மார்க்கத்தில்தானே நிவிர்த்தி மார்க்கத்தால்வரும் ஆத்மானுசந்தானபலனும் ஜீவன்முக்தி அனுபவிக்கப்பெறுவதே ஆத்மவிவாகத்தின்பலனும். "காதலிருவர் கருத்தொருமித்து ஆதரவுப்பட்ட" இடத்தில் அனுபவிக்கும் இன்பத்தினால் ஆண்-பெண் என்கிற பால்வேற்றுமை, பேதத்தையுண்டுபண்ணுவதாயின்றி, ஆணுக்கும் பெண்ணுக்குமுள்ள அபேதத்தன்மையை அவ்விரண்டும் ஒன்றுபட்டு விளங்கும் இன்பநுகர்ச்சியாம் அகப்பொருளுணர்விலுதிக்கும் ஆத்மானுபவத்தால் காட்டி, அதனால் ஆணும் பெண்ணும் சதி-பதி தர்மத்தால் உயிரும் உடலும் போல் அத்வைதபாவம்விளங்க "இரண்டற்று ஒன்றுபட்டிருப்பதை" அனுபவசித்தாந்தமாக வுணர்தல் விவாகதர்மத்தின் பலனும். விவாகதர்மத்தில் மறைந்து விளங்கும் இந்த உள்மர்மத்தையுள்ளபடி யுணர்ந்த தம்பதிகள் இல்லறத்திலிருந்தபடியே ஜீவன்முக்தர்களாகிறார்கள். இப்படி இல்லறத்திலிருந்தபடி இல்லறதர்மத்தை யநுஷ்டித்த மாத்திரத்தால் ஜீவன்முக்திநிலைபெற்ற புண்ணியாத்மாக்கள் எத்தனையோபேர்களில் சிவவாக்கியரும் அவர் மனைவியும் தமிழ் நாட்டாருக்கு மேலுதாரணமாய் நிற்பவர்கள். சிவவாக்கியர் பெண்டாட்டி, தன் தபோமகிமையால் கொக்கைப் பார்த்து அந்தப் பார்வைமாத்திரத்தால் அதை யெரித்த கொங்கண சித்தரைப்பார்த்து, அவர் தன்னை முனிந்து பார்த்தபொழுது "கொக்கென்று நினைத்தனையோ கொங்கணவா" என்று கூறி, அவரது தபோமகிமையின் இறுமாப்பைக் குலைத்த கதை சிறுவர் முதல் கேட்டிருப்பார்கள். இல்லறதர்மத்தை யனுசரித்து இகபோக நுகர்ச்சியாம் அறம், பொருள், இன்பம் என்கிற மூன்று புருஷார்த்தங்களையும் தர்மவழி பிறழாது தேடி யனுபவிக்கு மாத்திரத்தாலே, இவை யெல்லாவற்றிலும் மேலான நான்காவது புருஷார்த்தமாம் வீடு அல்லது மோக்ஷம் தானே கிடைக்குமென்று காட்டின மஹாத்மாக்களில் சிரேஷ்டமானவர் திருவள்ளுவநாயனார். அவர் பிறவிஞானியாயிருந்து துறவறமே பெரிதாக்கொண்டவராயினும், பிராரத்த வசத்தால் இல்லறம்புகநேரிட்ட காலத்து அகத்துறவு பூண்டு ஆத்மவிவாகதர்மத்தை யொட்டி இல்லறம் நடத்தும் விதம் இப்படியென்று உலகுக்குப்பக்காட்டுவான் வாசுகி தேவியாரைத் திருமணம்செய்து கொண்டனர். இல்லறம் பெரிதா, துறவறம் பெரிதா, என்று சந்தேகம் கொண்டு அவரைக்கேட்க வந்த ஒரு பிரமசாரிக்கு இல்லற தர்மத்துக்கிசைந்த பத்தினியின் குணம் இப்படியென்று தம் பத்தினியின் குணத்தைப் பலவிதத்திலும் அவருக்குக் காட்டிக்கடைசியில்,—

"பர்த்தாவுக்கேற்ற பதிவிரதை யுண்டானல்
எத்தாலுங் கூடியிருக்கலாம்-சற்றேனும்
ஏறுமாறாக விருப்பாளே யாமாயின்
கூறாமற் சந்நியாசங்கொள்."—

என்று உண்மை யுரைத்த உத்தமர் திருவள்ளுவரேயாம். இப்படி எல்லா தர்மத்திற்கும் மனப்பொருத்தம் முக்கியமானதாயிருக்கிறது.

இல்லற தர்மத்துக் கெப்படியோ, அப்படியே இராஜாங்கதர்மத்துக்கும் மனப்பொருத்தம் அவசியம். அரசு, குடியென்னு மிருவருக்கும் மனப்பொருத்த மில்லாவிடில், அந்த இராஜாங்கம் தலையெடுக்காது. அரசன் குடியின் சுகத்துக்காக ஏற்பட்டவன் என்றும், குடிகள் அரசன் சுகத்துக்காக ஏற்பட்டவர்கள் என்றும் மேற்றிசை நாகரிகம்பற்றிய இராஜதந்திரநிபுணர்களும் தத்துவநூல்வல்லவர்களும் பலவாறு பிதற்றுகிறார்கள். அரசனும் குடியும் "பதி-சதி" போல், ஒருவருக்கொருவர் இன்றியமையாத இயல்பினர். அவர்களின் சம்பந்தம் உள்ளபடி உண்மையாகப் பார்க்கில் அத்வைத சம்பந்தமாக விளங்கும். "அரசில்லாக் குடியும்," "குடியில்லா அரசும்" குதிரைக்கொம்பு, மலடிமகன்போல் இல்லாத வஸ்துக்களாம். அப்படியிருக்க வீணை மயக்கங்கொண்டு, வியவகரிக்கப்புகும் வஸ்துவின் ஸ்வரூபம் உணராது தப்பனுமானங்களைக்கொண்டு தர்க்கிப்பதில் வீணவஸ்தையன்றி வேறு பிரயோஜன மொன்றுமில்லை. தோப்பும்-மரமும் எப்படியோ அப்படிப்போல், அரசும், குடியும் சமஷ்டி(தொகுதி)-வியஷ்டி(பகுதி) பாவங்களாம். குடி, படை, நாடு, அரண், அமைச்சு முதலிய அங்கங்கள் சேர்ந்தது அரசு. இவ்வங்கங்கள் எல்லாவற்றிற்கும் மூலாதாரமாயிருப்பது குடி. ஆகையால் குடியின்றி மற்ற அங்கங்கள்யாவும் பயன் படாவாம். அப்படியே இந்த அங்கங்களெல்லாம் அமையப்பெற்றும் இவற்றை ஏகாக்கிரப் படுத்தவல்ல தலைவனும் 'அரசு' இல்லாதவிடத்து இவற்றின் 'சமஷ்டிபாவம்' உள்ளபடி யேற்படாது வீணேகழியும். ஆகையால் அரசுக்கும்-குடிக்கும் உண்மையில் உள்ளபடியில்லாத வேற்றுமைபாராட்டி பேதபாவனை யுண்டுபண்ணுகிறவர்கள் யாவரேயாயினும் அவர்கள் அரசியலாம் இராஜநீக தர்மத்துக்கு விரோதமாக நடப்பவர்களாதலால் கண்டிக்கப்படத்தக்கவர்களாம். இவர்கள் அரசியல்தர்மத்துக்கு விரோதிகளாதலால் இவர்களைச் சுருங்கச்சொல்வான் 'இராஜத்துரோகிகள்' என்று சொல்லலாம். 'இராஜத்துரோகி' என்கிற பதத்திற்குள்ள அர்த்தத்தை நாம் எடுத்து விளக்கியிருப்பதை எல்லவரும் கவனித்து மனதிலிருத்த வேண்டும். அரசுக்கும் குடிக்கும் அத்வைதசம்பந்த மேற்பட்டுப்போனபடியால் அரசனுக்கும் குடிக்கும் வாஸ்தவத்திலில்லாத வேற்றுமையை யுண்டுபண்ணி, கற்பனை மாத்திரத்தால் பல பல குற்றங்களைப்பாவித்துப் பிரமாதமாகப் பேசுவதிலும், அப்பேச்சுக்குத் தக்கபடி நடப்பதிலும் பிரயோசனமில்லை. அவ்விதப்பேச்சும் நடத்தையும் அரசியலுக்கு ஒத்ததாகாவாகையால் அவற்றைப்பற்றி நாம் கவனிக்கத் தேவையில்லை.

'இல்லறஇயல்' இன்ன தென்பதையும், 'அரசியல்' இன்ன தென்பதையும் ஒருவாறு விளங்கக்கூறினோம். இல்லற இயலில் நம்முன்னோர் ஏற்படுத்திய உயர்பாவமாம் ஆத்மவிவாகதர்மத்துக்கு மாறாக, ஸ்ரீரங்கம் சந்தையில் மாடுபிடிக்கிற பாவனையாகப் பிள்ளைகளுக்கு ரொக்கவிலைகொடுத்து வாங்கிக் கல்யாணம் செய்யும் வழக்கம் வரவர மேலிட்டு வருகி

றது. அக்னிசாக்ஷியாக ஆத்மபூரணமாக ஈருயிர் ஒருயிராக் கலக்கவேண்டியதற்காஸ்பத மான நம் விவாகசடங்கு, சந்தையில் மாடுபிடி சமாசர்ரமாக முடிந்தபின், அதன் உண்மை யான உள்ளர்த்தத்தையும், உயர்பாவ மகிமையையும் இழந்து விடுகிறது. இதனால் சம்பந்தி களுக்குள் காசுபண சம்பந்தமான விஷயங்களில் மனம் இறங்கி விடுவதால், உள்ளத்துவகை கெட்டு, கடுகடுப்பும் வெடுவெடுப்பும் விஸ்தாரமாக விர்த்தியாகிறது. இதனால் தம்பதிகளுற வுக்கும் பங்கம் வருகிறது. இளவயதிலேயே அன்பில் லயிக்கவேண்டிய மனம் காசுபணம் கொடுத்து வாங்கும் விபவகாரசம்பந்தமாய்வரும் விபர்த்தமான துன்பில லயிப்பதால் கசங் துபோக நேரிடுகிறது. இதனால் விளையும் அநர்த்தங்களைச் சொல்லமுடியாது. அன்பிலீடுப டாத மனம் அநர்த்தம் விளைக்கும். அநர்த்தவிளைவால் இல்லறதர்மம் கெட்டுப்போவ தன்றி அவர்கள் இல்வாழ்க்கையும் பயனற்றதாகின்றது. பயனற்றவாழ்க்கையில் பிறக் கும் குழந்தைகளும் பயனற்றவைகளாகவே தானிருக்கும். இதனால் குணக்கேடு விர்த்தி யாவதன்றி சத்ஜன விர்த்திக்குப் பெருங்குறைவு நேரிடுகிறது. சத்ஜனவிர்த்தி குறைய துர்ச் சனவிர்த்தி அதிகரிக்கிறது. இப்படி எவ்வாற்றானும் கேடுவிளைவதால், தேசமே கெட்டுப் போகக் காரணமாயிருக்கிறது. இல்லற தர்மம் கெட்டவிடத்தில் புண்யாத்மாக்கள் புனர்ஜ ன்மம் எடுக்கவரார்கள். புண்யாத்மாக்கள் புனர்ஜன்மத்துக்கு ஹேதுவின்றிப் புறம்போக நேரி ட்டால், க்ஷேத்திரத்தின்மகிமைக்குக் குறைவு வரும். அநேக திவ்ய க்ஷேத்திரங்கள்மகிமை குறைந்து மாட்சிகெட்டுப் போவதற்குக்காரணம் இதுவே. இந்தக்கேடு ஜனங்களது பணவா சையால் வருவது. தர்மத்தைவிட பணத்தைமேலாக மதிக்கும்மனமே தீயமனமாகின்றது. நன்மனமோ, பிரபுலிங்கலீலை, 'சாதகாங்ககதி'யில் சொல்லியுள்ளபடி,—

> "ஓடும் பொன்னும் உறவும் பகையும்ஓர்
> கேடுஞ் செல்வமும் கீர்த்தியு நிந்தையும்
> வீடுங் கானமும் †வேறற நோக்குதல்
> கூடுந் தன்மை கொளுமனம் நன்மனம்."

தீயமனமோ வெனில் காமக்குரோதாதி தீக்குணங்களால் பெருங்காற்றிலும் அனலிலும் அடிபட்டு வாடும் ஸ்வாபவ முள்ளது. அறுவிதமான உட்பகை விகாரங்களால் அடிபட்டு வாடும் அந்த மனத்தை யாருந்தடுக்க முடியாது, அதாவது அடக்கியாள முடியாது. அடங்குமனம் அடங்காமனம் என்னுமிரண்டில், முன்னது தர்மவழிபற்றி யொழுகுவதாலும் பின்னது அவ்வழி தப்பிப்பிறழ்வதாலும் உண்டாகும். அப்படியாக இல்லற தர்மத்துக்கு இன்றியமையாத விவாகதர்மம் கெட்டுப்போவதால் நேரிடக்கூடிய ஆபத்துக்களை புத்திசாலிகள் எளிதில் ஊகித்துக்கொள்ளலாம். இது ஆத்மபுத்தி குறைந்து அநாத்மபுத்தி விர்த்தியாவதால் வரும் வில்லங்கங்களில் ஒன்று.

இரண்டாவதான அரசியல்தர்மங் கெட்டுப்போவதால் வரும் வில்லங்கங்கள் இன் னும் பெரிதாய் இவற்றிலும் எத்தனையோ மடங்கு மேலானதாக விருக்கின்றன. அவற்றை முற்றும் சொல்லுவது சாத்தியமாகவில்லை. இதுகாறும் பிரிட்டிஷ்இராஜாங்கம் தர்மராஜ்யம் என்கிற பேருக்குரித்தானதாகுமென்று ஜனங்கள் நம்பியிருந்தார்கள். ஜனங்கள் இகபோக

† விததிபாசமற, அதாவது அபேதமாக, சமபாவத்தோடு.

இச்சை யிருந்தவர்களா யிருந்தபடியால், தர்மம் தலையெடுப்பதும் தலைகவிழ்வதும் தெரியாது அவரவர்களும் ஸ்வகாரியத்திலே கண்ணுயிருந்து விட்டார்கள். தர்மம் தவறினல் அதர்மம் தானே தலையெடுக்கும் என்பது நித்தியவிதி. இந்த ஆரியவர்த்தமான புண்யபூமி ஸநாதநதர்மத்தையே பிராணுதாரமாகக்கொண்டு அநுஷ்டித்து வருவது. இந்த மஹாக்ஷேத்ரத்தில் எப்பொழுது தர்மம் தலைகவிழ்ந்துபோய் அதர்மம் தலையெடுத்தாடுகிறதோ அப்பொழுதெல்லாம் நான் அவதாரமாகி தர்மத்தை நிலைநாட்டுவேன் என்று பகவான் கொடுத்த வாக்கு ஒருகாலும் பொய்த்ததில்லை. இப்பொழுது பிரிடிஷ் இராஜாங்கம் ஸநாதனதர்மத்தை விட்டு அதர்ம வழியில் பிரவேசித்திருக்கிறதாகத் தெரிகிறது. பலவருஷங்களாக ஆளும் வகுப்பைச் சேர்ந்தவர்களான பிரிடிஷ் அதிகாரிகள் ஜனங்கள் மனக்கிளர்ச்சிக்கு மாறுதலாக நடந்து வந்தாலும், சில்லரை யக்கிரமங்கள் ஏதோ விசேஷமாக நடந்து வந்தாலும், அவைதெல்லாம் இப்பொழுது பெரிய அக்கிரமங்களில் வந்து முடிந்திருக்கிறது. 'அரசியல் தர்மம்' என்பதுபோய், அரசப்பிரதிநிதிகளும் உத்யோகஸ்தர்களும் வைத்ததே சட்டமென்கிற ஸ்திதிக்கு வந்துவிட்டது. இந்த அரசப்பிரதிநிதிகளும் உத்யோகஸ்தர்களும் முற்றுமுணர்ந்த ஞானிகளுமல்லர். அகத்துறவுபூண்ட ஆத்மநிஷ்டர்களுமல்லர். ஆனல், ஸ்வகத, ஸ்வஜாதீய, விஜாதீய வேற்றுமை பாராட்டும் சித்தத்தினர் என்பது ஸ்பஷ்டமாயிருக்கிறது. அரசுரிமைஸ்தானத்திலிருப்பவர்தோலும் அவர்கள்தோலும் ஒரே நிறமாயிருக்கிற விசேஷத்தாலும், அவர்களிருவரும் ஒரேதேசத்தாராய், ஒரே இனத்தாராயிருக்கிற விசேஷத்தாலும், வெள்ளைத்தோல் கறுப்புத்தோல் என்கிற வித்யாசமும், இங்கிலாந்து வேறு இந்தியாவேறு என்கிற வித்யாசமும் பாராட்டி, ஸநாதனதர்மத்தைக் கைநழுவவிட்டு விட்டார்கள். லாலா லஜபதிராய், ஸர்தார் அஜித்ஸிங் இவர்களை விசாரணையின்றிப் பிடித்துக் காவலில் வைத்திருப்பது இத்தேசத்தில் "வெள்ளைக்காரன் வைத்ததுசட்டம்" என்கிற விதிக்கு ஒத்திருந்தாலும், வெள்ளைக்காரன் தோல்மட்டும் வெள்ளையேயன்றி மனம் வெள்ளையாக வில்லாதகாரணத்தால் வெள்ளைக்காரன் மனப்போக்கு ஸநாதநதர்மத்துக்கு ஒத்துவரவில்லையென்று ஜனங்கள் முறையிடுகிறார்கள். இமாசலமுதல் கன்னியாகுமரி வரையிலும் சிந்துநதிமுதல் பிரம்மபுத்திர நதிபரியந்தமுமுள்ள ஜனங்கள் அத்தனைபேரும் ஸநாதன தர்மத்தில் நம்பிக்கை வைத்தவர்களாதலால், "வெள்ளைக்காரன் வைத்ததுசட்டம்" என்கிற கொள்கை ஸநாதநதர்மத்துக்கு ஒத்ததாக வில்லாமையால் தர்ம விரோதமான அரசியல் நீடித்து நிற்காது; ஸநாதனதர்மத்துக்கு மாருக நடந்துகொண்ட காரணத்தினலேயே "பிரிடிஷ் கவர்ன்மெண்டுக்குப் போங்காலம் வந்துவிட்டது" என்று நாக்கூசாமல் தைரியமாகப் பறையறைந்து பேசுகிறார்கள். "தர்மம் தலையெடுக்கும், அதர்மம் அழியும்" என்பதில் பூர்ண நம்பிக்கையுள்ள பாமர ஜனங்கள், "அரசியல்தர்மங்கெட இந்தியா கவர்ன்மெண்டார் மனப்பூரணமாக அதர்மத்தில் பிரவேசித்து விட்டார்கள் ஆகையால் அவர்களுக்குக் கெட்டுப்போகுங்காலம் கிட்டிவிட்டது" என்று இங்லீஷ்படித்து பிரிஷ்டிகவர்ன்மெண்டை ஸ்தோத்திரம்செய்து வந்தவர்களே இப்பொழுது சொல்லும்பொழுது, "தர்மம் எப்படியும் தலையெடுக்கும்; அதர்மம் எப்படியும் அழியும்" என்னும் ஸநாதநதர்மத்தில் நம்பிக்கையுள்ள அச்சனங்கள் உள்ளக்கிளர்ச்சியால் உவகைமேற்கொண்டு மதுவுண்ட மந்திகள்போல் கூத்தாடுகிறார்கள். ஜனங்களின் உள்பாவத்தையறியமாட்டாத வெள்ளைக்காரர்கள், "தர்மம் தலை

யெடுக்கும்! அதர்மம் அழியும்!" என்கிற கொள்கையிலுள்ள பூரணநம்பிக்கையால் ஜனங்கள் தர்மம்தவறினவெள்ளைக்காரர்களை மதியாது தர்மராஜ்ஜியத்தைக் கோறினவர்களாய், "அந்நியராஜ்யம் அனர்த்தம் விளைக்கும், ஸ்வராஜ்யமே சுகமளிக்கு"மென்று ஸநாதநதர்மத்தையொட்டி அவர்கள் சொல்வதைக்கேட்டு மதிமயங்கி விழிக்கிறார்கள்.

இங்கிலீஷ்படித்துவிட்டு, ஆத்மபுத்தியின்றி தர்மாதர்மத்தின் ஸ்வரூபமுணரமாட்டாது, நித்தியாநித்தியவஸ்துவிவேகமின்றி, இங்கிலீஷ்பாஷையில்மட்டும் பேச்சுவல்லவர்களாயிருக்கும் சிற்சில மூடமதிகளும், அறிவும் அனுபவமும் முதிராத வாலிபர்களும், மூலதத்துவங்களை அரைகுறையாகவும், அறிந்தும் அறியாமலும் எடுத்தாண்டு பஹிரங்கமாய்ப் பிரசங்கித்தும் பத்திரிகைகளில் எழுதியும் வருவதைப்பார்த்து, இருநூறு வருஷகாலம் இத்தேசத்திலிருந்தும் ஜனங்களின் உள்பாவத்தையறியமாட்டாமல் தவிக்கும் வெள்ளைக்காரர்கள் தங்கள் ஸ்வகத, ஸ்வஜாதீய, விஜாதீய வேற்றுமை அபிமானத்தைக்கொண்டு பிறர்களையும் அப்படியே மதித்து, இந்தியர்களெல்லாரும் கூடி வெள்ளைக்காரர்களைத் துறத்திவிட வெண்ணி "வந்தே மாதரம்" என்று ஏதோ சங்கேத பாஷையில் கூச்சல் போடுகிறார்களென்று மதிமயங்கி உயர்பதவியிலுள்ள உத்தியோகஸ்தர்களுக்கு எழுத, அவர்களும் அதைக்கேட்டு மதிமயங்கி கவர்னர், கவர்னர்-ஜெனரல் முதலான மேலுத்தியோகஸ்தர்களுக்கெழுத, அவர்கள் மதிமயக்கத்தைக்கண்டு, இந்தியாவைக் கண்ணால் பார்த்தறியாது இத்தேசத்தை யாள்வதாய் பிருதுகட்டி இந்தியாமந்திரியென்று பேர்வைத்துக்கொண்டிருக்கும் சீமையிலுள்ள இத்தேசத்துக்குரிய அரசிபல்மந்திரி தானும் மதிமயங்கிப்போக, தலைமுதல் கால்வரையிலுள்ள இராஜாங்க உத்தியோகஸ்தர்களும் அவர்கள் இனத்தாரான மற்ற வெள்ளைக்காரர்களும் மதிமயங்கி வெறிமேலிட்டு தர்மாதர்மம் தெரியாமல் ஸநாதநதர்மத்தை விட்டுப்பிறழ்ந்துநடக்கத்துணிந்துவிட்டார்கள். "கேடுவரும் பின்னே மதிகெட்டு வரும் முன்னே" யென்பதில் பூரணநம்பிக்கையுள்ள பாமரஜனங்கள் "வெள்ளைக்காரனுக்கு விநாசகாலம் வந்துவிட்டது! வந்துவிட்டது!" என வற்புறுத்திக் கூறுகிறார்கள். இதனால் அவர்கள் வெள்ளைக்காரர்களை தங்களுடைய புஜபல பராக்ரமத்தால் எதிர்த்து வென்று தங்கள் தேசத்தை அவர்களிடமிருந்து பறித்துக்கொண்டு ஸ்வராஜ்பத்தை யேற்படுத்திவிடப்போகிறதாக எண்ணம் சிறிதும் அவர்கள் மனதிலில்லை.

"தர்மமேஜயம்" "ஸத்யமேவஜயதி" — "மெய்யே வெல்லும் பொய்யல்ல" என்னும் ஸநாதநதர்மக்கொள்கைகளில் அவர்களுக்கிருக்கும் பூர்ணநம்பிக்கையைக் காட்டுகிறவர்களாய் அவர்கள் அப்படி யென்றுமில்லாதபடி "அச்சந்தவிர்த்து, ஆண்தன்மை பூண்டு பேசுகிறார்கள்." ஈசுவரியின் அபயவரதஸ்தங்களின் உண்மையை யுணர்ந்தவர்களாதலால், யாருமறிய அரசியல்தர்மம் தவறினவிடத்து "அஞ்சேல்! அஞ்சேல்!" என்று அபயஸ்தம் காட்டிநிற்கும் அம்பிகையின் திருக்கோலத்தை மனதில் நினைத்து தியானித்து "அதர்மம் அழிக! தர்மம் தலையெடுக்க!" என்று ஸநாதநதர்ம வாய்ப்பாட்டைச்சொல்லி வாழ்த்தியும் சபித்தும் ஈசுவரியின் மகிமையையும் அவளது அபாரசக்தியையும் உள்ளத்தில் எண்ணி, அவள் தன் காலைப்பற்றச்சொல்லி வரதமுத்திரையளித்து நிற்கும் இடது கரத்தை மனதிற் சிந்தித்து அவளது திருவடித்தாமரைகளில் "அபயம்! அபயம்!" என்று அபயப்

பிரதானம்கேட்டுச் சரண்புகும் பாவனைமேலிட்டால் "வந்தே மாதரம்" "தாயே வந்தனம்" அல்லது "தாயே சரணம்" என்றுசொல்லி சரண்புக்கும் மந்திரத்தை யுச்சரிக்கிறார்கள். இதனுடைய உண்மையை யுணரமாட்டாமல் வெள்ளைக்காரர்கள் விபரீத அர்த்தம் செய்துகொண்டு புத்தியில்லாப் பாமரர்களோடு மல்லுக்கு நிற்கிறார்கள். இப்படியாகக் காலம்கெட்டு விபரீதம் மேலிட்டிருப்பதால், புத்திமான்கள் காலத்துக்குத்தக்க கோலம்போட்டுக் காட்டுவதோடு, பிறர்க்கும் அதைப்போதிக்க வேண்டியதாக விருக்கிறது!—கேசரி-மார்ஜாலிவிக்ரக மங்களஸ்வரூபியான மஹாவிஷ்ணுவே காலத்துக்குத்தக்கபடி கோலம்போட்டு அவதரிப்பவராதலால், உலகநாயகனும் மஹா மாயாவியுமான அவன் கபட நாடக சூத்திரத்தி லீடுபட்டுள்ளவரான அவனுடைய பக்தஜனங்களாம் நாம் அவன் வழிப்பட்டு நடக்காது வேறு எவ்விதமாக நடக்க முடியும்! ஸநாதநகர்மம் நீடூழி வாழ்க!

ஓம்தத்ஸத்.

---

## *KAMBARAMAYANAM-SUNDARAKANDAM.

### The Beauty of the Exploits of Hanuman.

### ராமாயண சுந்தரகாண்டத்தின் சௌந்தரியம்.

(ஹனுமார்வைபவம்).

கல்வியிற் பெரியவனான கம்பனியற்றிய இராமாயணம் தமிழில் ஒப்புவமையற்றதோர் இனியகிரந்தம். வால்மீகி இயற்றிய இராமாமிர்த சாகரமாகிய இராமாயணத்தில் சுந்தரகாண்டம் பாலினுட் சுவைபோல் மிகவும் ரஸம் பொழியும் பாகம். இன்றைக்கு ஆறுவருஷங்களுக்கு முன்பு நாம் அத்யாத்மதாபத்தால் வருந்தி மூர்ச்சித்துக் கிடக்கையில் நமது நண்பர் தீனதயாளு தாமெழுதிய தமது சரித்திரமொன்றை யெடுத்துக்கொண்டு நம்மைக் காணவந்தவர், நாம் ஈசுவரனைத் தியானித்திருந்து தியானித்தபடியே மூர்ச்சித்துப்போய்க் கிடந்ததைக்கண்டு அன்பு மேலிட்டவராய் அனுதாபங்கொண்டு நம்மை யெழுப்பாதுபோயினர். வந்தவர் நம்மைப் பார்த்துப்போன சற்று நேரத்திற்கெல்லாம் நமது தர்மபத்னி வந்தவர் சொன்ன வார்த்தைகளைக் கேட்டிருந்து உள்ளதைச்சொல்ல, அவரையோடோடியும் கூப்பிட்டுத் திரும்பிவந்தவரோடு சற்றுநேரம் மனங்கலந்து அளவளாவியிருந்தோம். அப்பொழுது அவர் அடியேன் அத்யாத்ம தாபத்தைக் கண்டிருகி, அதற்கு மருந்து ஒன்றேயுண்டு: இராமாமிர்த சாகரமாம் இராமாயணத்தில் சுந்தரகாண்டபாராயணத்தைத் தவிர வேறு பரிகாரமில்லையென்று சொன்னார். அப்படியா! என்று ஆவலோடு அவர் சொன்னதைக்கேட்டிருந்து உடனே முறைப்படி சுந்தரகாண்டபாராயணம் செய்யத்துவக்கினோம். சம்ஸ்கிருதபாஷாஞானமில்லாதவனாகையால் சமஸ்கிரதத்தில் வல்ல ஒரு வித்வானைக்கொண்டு பொருள் சொல்லச்சொல்லி சில நாள் பாராயணம் செய்து வந்தோம். அப்பொழுது

* Sri Vani Vilasini Tamil Series No 1. Sri Vani Vilas Press, Srirengam.

ஹனுமார் பிரதாபமே நிறைந்த அந்த சுந்தரகாண்டத்தின் உள்ளருத்தம் ஆத்மானுசந்தானஞ்செய்து முக்தியாகின்ற அம்மனைத்தேடியலைகின்ற மனதுக்கு, எல்லாம் தன்செயலேயெபற்றிச் சொல்வதாகப்பட்டதால்,இதையுணர்ந்த வித்வத்சிரோமணியும் வேதாந்த வித்துமாகிய பண்டிதர், "உமக்கு இந்தப் பாராயணம் தேவையில்லை! நீரே ஹனுமானுயிருக்கிறீர்! ஆனால் ஹனுமானுக்கும் ஒரு சாபமுண்டு. அவன் பலத்தை அந்நியர் சொல்லி ஞாபகமூட்டினாலன்றி அவன் அறியாமற் போகக்கடவது என்று ஒரு இருஷி ஹனுமானுக்கு சாபம்கொடுத்துவிட்டார். ஆதலால் உமது பரிபக்குவத்தை உமக்குச்சொல்லவேண்டியதின் பொருட்டு இந்தப்பாராயணம் நீர் தொடங்கும்படி சம்பவித்தது. ஆதலால், அது முடிந்ததும் பாராயண படனமும் உமக்கு முடிந்ததாகக் கொள்ளவேண்டியது" என்றார்.

"திடசித்தமாகவே சத்சங்கபலத்தால்
தேஜோமயமான ஆத்மாவைநான்
தன்னுக்குள்ளே கண்டுகொண்டேனையா"

என்று சொல்லவும் இன்னும் வாசித்தால் போகப்போகத் தெரியுமென்றார்.

"முக்தியாகின்ற அம்மனைக்கண்டு நான்
முத்திரைகொடுத்து மணிவாங்கிக்கொண்டு
உத்தரதிக்கில்வர நினைத்தேனையா."

என்பதிலுள்ள அனுபவத்தைச் சொல்லவும், சீதையைக்கண்டு முத்திரைமோதிரம் கொடுத்து சூடாமணியை வாங்கிக்கொண்ட கட்டத்துக்கு வந்து விட்டோமென்றார். பிறகு,—

சம்ஸாரமாகும் விருக்ஷச்சாகைக்கப்புகள்தன்னைச்
சடசடாயமாக நான்முறித்துவிட்டு
ஒரு தெந்தினப்பாட்டையும் பாடிக்கொண்டு—

ஜனனமரணமென்ற சாகரத்தைத்தாண்டி திரும்பி வந்தேனையா இக்கரையில்—என்று சொல்லவும் அசோகவனமழித்து இலங்கைக்கும் தீயிட்டாய்விட்டது! மதுவனமழிக்கவேண்டியதொன்றுதான் பாக்கி என்றார்.

"மட்டில்லாதவொரு ஆனந்தங்கொண்டுநான்
மப்புத்தட்டிக்கொக்கரித்துக்கொண்டு"

மற்றொருதினம் ராமாயண படனம்செய்துகொண்டிருக்கையில் ஆத்மசூடாமணியாகிய அறிவைப் பரமாத்மாவிடத்தில் கொண்டுபோய் சமர்ப்பித்த அனுபவம் வர, அதைச்சொல்லவும் அவர் "சுந்தரகாண்டம் முடிந்துவிட்டது இன்றைக்கு!" என்றார்.

அன்று முதல் ஜீவாத்மா சாதன சதுஷ்டயசம்பன்னனாய் அந்தர்முகமாகி ஆராய்ச்சிசெய்து அறிவாகிய ஆத்மசூடாமணியைப் பரமாத்மாவின் பாதத்தில் சமர்ப்பிப்பதே ஹனுமார் வைபவங்களை அழகழகாகச்சொல்லும் சௌந்திரியம் நிறைந்த சுந்தரகாண்டம் என்றும், அந்த அனுபவத்தை 'அறியாமை'யென்னும் சாபம் நீங்கி அறிவு என்னும் வரப்பிரஸாதம் கிடைக்கும் வரையில் திரும்பித்திரும்பி அப்பியாசிப்பதே சுந்தரகாண்டம் பாராயணம் செய்வது என்றும் அறிந்துகொண்டேன்.

ஆறுவருஷங்களும்போய் அத்யாத்மதாபமும் அடங்கினபின், அறிதுயிலமர்ந்து தூங்காமற்றூங்கி யுலகையிரக்ஷிக்கும் அரங்கநாதர் திருப்பள்ளிகொண்டிருக்கும் அழகைப்பார்த்து வருவான் ஸ்ரீரங்கத்துக்குப்போன பொழுது அரங்கநாதர் தரிசனம்செய்துக்கொண்டு வருகையில் ஸ்ரீவாணீவிலாச யந்திரசாலைத் தலைவரும் நமது நண்பருமான பிரம்மஸ்ரீ பாலசுப்ரமணியஐயர், அவரது அச்சுக்கூடத்தில் உந்நதமான காகிதத்தில் அழகாய் அச்சிட்டுக் கட்டடம் செய்த கம்பராமாயணம் சுந்தரகாண்டம் மட்டுமடங்கிய புஸ்தகத்தைக் கையிற் கொடுத்துப் பார்வையிட்டெழுத வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். கொடுத்த புஸ்தகத்தைப் பார்வையிட்டேன். அப்புஸ்தகத்தின் அச்சுப்பதிப்பின் அழகைத்துதிக்கவோ, அல்லது அதைப்பதிப்பித்த பண்டிதர் ஸ்ரீகிருஷ்ணமாசாரியர் அவர்கள் வித்வத்ரத்னமாகிய பண்டிதர் எஸ். ஸ்வாமிநாதையர் உதவியைக்கொண்டு பரிசோதிக்கப்பட்ட எட்டுப்பிரதிகளை யச்சிடுவதில் பாடபேதங்களை யாராய்ந்து அங்கங்கே அனுகுணமாகச் செய்யவேண்டிய சீர்திருத்தங்களை முதலுக்கு மோசம் வராமல் புத்தி யுத்தி சாமர்த்தியத்தோடு திருத்தாமற்றிருத்தியிருக்கும் சாமர்த்தியத்தைப் புகழ்வேனோ; அல்லது அப்புஸ்கத்தைப் பதிப்பித்த ஸ்ரீமான் பாலசுப்ரமணிய ஐயர் கரும்புதின்னக்கூலியை யெதிர்பார்க்கும் சோம்பேரிகளும்கூட அதன் உருசியையறிந்து வலுவில்மேல்விழுந்து வாங்கித்தின்னும்படி, கட்டுக்கரும்பில் இங்குமங்கும் ஒருகருணைவெட்டி ஆலையில் வைத்துப்பிழிந்து அதன் இரசத்தைச் சுவைக்கக் கொடுப்பதுபோல் இங்கிலீஷில் எழுதியிருக்கும் நீண்ட முன்னுரையைப் புகழ்வேனோ; அல்லது அசோகவனத்தில் சீதாதேவி அரக்கியர்நடுவில் சோகமுற்று வீற்றிருக்கும்காக்ஷியைக்காட்டும் படத்தைப் புகழ்வேனோ; அல்லது சுந்தரகாண்டத்தின் கருத்தையெல்லாம் ஒரு படத்தில் தீட்டியதுபோல், ஹனுமார் சீதாதேவிக்கு முத்திரை மோதிரமளித்து, சூடாமணியைப் பெறும் சந்தர்ப்பத்தை விளக்கும் வர்ணந்தீட்டிய படத்தின் அழகைப் புகழ்வேனோ; சுந்தரகாண்டத்தின் கதாசாரம்நிறைந்த கதைச்சுருக்கத்தின் சொல்வனப்பைப் புகழ்வேனோ; அல்லது ஆறுவருஷங்களும் சென்றபின் ஹனுமார் சரிதைபைப்படித்தயான் ஹனுமாரேயாகி ராவணன் சீதையைக் கொண்டுபோனது போல, ஆரியபுத்திரர்களில் சிரேஷ்டர் என்றும் உத்தமரென்றும் ஜனங்கள் கொண்டாடும் பண்புடை நண்பரை, ஆகாசமார்க்கமாகவின்றி நிலத்திலும் கடலிலும், 'மோடாரிலும் ரயிலிலும்', கப்பலிலுமாகக்கொண்டுபோய் தூரதேசத்தில் சிறையிருத்திவிட்டு, இராவணன் தன் சாமர்த்தியத்தை யெல்லாம் சொல்லித் தன்னையே புகழ்ந்து கொண்டதுபோல், பார்லிமெந்துசபையில் தன் சாமர்த்தியத்தைத் தம்மவரெல்லாரும் மெய்ச்ச; மெய்ச்சப்பேசின இந்தியாமந்திரியின் பேச்சிலுள்ள பதர்களையெல்லாம் வாயு புத்திரனை ஹனுமான் காற்றினலசோகவன மழித்ததுபோல், எடுத்துத்தூற்றி, அவை காற்றில் பறப்பதைக்காட்ட நேர்ந்ததோர் காக்ஷியைச் சொல்வேனோ; அல்லது இராமாமிர்தம் தமிழிற்பொழியப்பாடிய கம்பனைத்தான் புகழ்வேனோ, அல்லது எல்லாவற்றையும் மறந்து ஸ்ரீ இராமனையே தொழுவேனோ, அல்லது அவனை உள்ளபடியறிந்து அண்டிப்பிழைப்பது அரிதரிதென்று அஞ்சி, அவன் ஸ்வரூபத்தை மனதிலிருத்தி அவன் சந்நிதிவிட்டு நீங்காமலிருந்து தனக்கு முத்தி சித்தியொன்றும் வேண்டாம், என்றென்றைக்கும் இராமபக்தி குறையாமல், இராமாமிருதம் சதாஹிருதயத்தி லூறிக்கொண்டிருந்தால் அதுவே போதுமென்று நித்திய பக்தனாயிருக்கும் அஞ்சனைகுமாரனை ஆஞ்சநேயரையே துதிப்

பேனே, இன்னசெய்வதென்று தெரியவில்லை, ஆனாலும் முக்தியிலும் பக்தியேபெரிதென்று காட்டிய பஞ்சபூத பராக்கிரமனை,—

"அஞ்சிலே யொன்று பெற்ற னஞ்சிலே யொன்றைத் தாவி
அஞ்சிலே யொன்றா றாக ஆரியர்க் காகவேகி
அஞ்சிலே யொன்று பெற்ற வணங்கைக்கண் டயலாரூரில்
அஞ்சிலே யொன்று வைத்தான், அவன் நம்மை யளித்துக் காப்பான்."

என்கிற தைரியம்மட்டும் பூரணமாக விருக்கிறது. இந்த ஹனுமானுடைய பிரதாப சீலத்தையும் குணகம்பீரத்தையும்பற்றித்தனியாகவொரு புஸ்தகம் போடுவதாகச் சொல்லியிருக்கிறார். அவ்வாக்கைச் சீக்கிரத்தில் நிறைவேற்ற அஞ்சனைபுத்திரன் அருள் நிறைந்து அனுக்ரகிப்பாரென்று அவன் திருவடியைத்தொழுது நிற்கின்றோம்.

———

ஸ்ரீ பகவத்கீதைவெண்பா:—ஸ்ரீரங்கம்வாணீவிலாச அச்சயந்திரசாலையில்பதிப்பிக்கப்பட்ட பகவத்கீதைவெண்பா என்னும் அழகிய புஸ்தகமொன்று வரப்பெற்றோம். இது வாதிகேஸரி ஸ்ரீ அழகியமணவாள ஜீயர் அருளிச்செய்தது. மிகவும் அருமையானதோர் பூர்வீககிரந்தம். பழைய பிரதிகளைக்கொண்டு பரிசோதித்து நூதனமாய் அச்சிடப்பட்ட இந்த கிரந்தம் கீதாமிர்தத்தை சமஸ்கிருதத்தில் பருகக்கூடாதவர்களெல்லாரும் தமிழில் அதன் ரஸம் குறையாது பருக அநுகூலமாயிருக்கிறது. இதன் அருமை பெருமையை வாசித்தறியவேண்டுமேயன்றி பத்திரிகைகளில் அரை குறையாய்ச் சொல்வதி லிருந்துணர முடியாது. மூலம் பிழையறப்பரிசோதித்து அச்சிடப்பட்டிருப்பதுடன், அச்சுப்பதிப்பும் கட்டடமும் மிகவும் அழகாகவிருக்கிறது. 2-வது ஷட்கத்தின் மேற்புறத்தில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் வேணுகானம் செய்யும் கோலமாய் நிற்கும் அழகிய படமொன்று பதிப்பிக்கப்பட்டிருக்கிறது.

———



ஜகஜ்ஜநநீஸத்குரோ.

# திருவருட்கதம்பம்.

## (திருவையாறு, லக்ஷ்யானந்தம்.)

(8-வது பக்கத்தொடர்ச்சி.)

73. கதியெனவடைந்தவர்க்கே கருணையாலிழுந்தஞான
நிதியெனவடைந்தவுன்றன் நிர்மலாகாரம்விட்டுப்
புதிதெனவேண்டவேறு பொருந்துமோபொருந்திவிட்டால்
மதியுளராவரோதான் மானிடப்பிறப்புமாமோ.

74. ஆதிமெய்ப்பொருளாமொன்றே யடியர்க்காய்க்கருணைபூண்டு
தீதிலாமேனிசத்தித் தெரிசிக்கவெதிரிற்றோன்றிக்
கோதிலாவார்த்தைபேசிக் குறைவிலாப்பதவிகாட்ட
வீதியிலுலவிநின்றும் வேண்டிடார்மனிதரோதான்.

75. எம்பிரான்நின்றபூமி யெதற்கும்மேலானக்ஷேத்ரம்
எம்பிரானளித்தவாக்கே யிணையிலாவேதஸாரம்
எம்பிரான்கடைக்கணுக்கே யீடிலாஞானதீர்த்தம்
எம்பிராற்காளாய்நிற்றல் யாங்களேயடைந்தபாக்யம்.

76. உன்னிடாவுணர்வாய்நின்றாவுயர்ஞானசேகரந்தா
னெண்ணிடவறியாமௌன வெழின்மணியன்பர்க்கியத்
தன்னிடம்பெயர்ந்துலாவித் தவமுடையோர்முன்றோன்றிக்
கண்ணினுக்கெளிதாய்நின்ற காட்சியேகாட்சியன்றோ.

77. எதுவெதுவாகவன்ப ரிசைத்துணையழைத்திட்டாலும்
அதுவதுவாகநின்றே யவரவர்க்கருள்புரிந்திட்
டிதுவதுவென்றுசொல்ல வியலாதமூர்த்தியுன்னை
அதுவதுவாகக்கண்டா லதுவன்றோகாட்சியாகும்.

78. கண்ணினாற்காணக்கிட்டாக் காதினாற்கேட்கமாட்டாப்
பண்ணினாற்பாடமாட்டாப் பதநடந்தடையமாட்டா
எண்ணினாலறியக்கிட்டா வெழில்பெறுஞானவாழ்வு
தன்னினாலுருவாய்வந்த தன்மையைக்காண்டல்காட்சி.

79. செய்யவோர்கருமமில்லை செய்திடிற்பயனுமில்லை
வய்யகமுழுதுமாய வஞ்சனையஞ்சிடாயென்
றுய்யவோர்மொழியைச்சாற்றி யுளம்விடுத்தொழியாநின்ற
வையன்சந்நிதியைக்கண்டா லதுவன்றோதரிசனங்காண்.

80. எல்லாமுந்தானேயாகி யெதுவுந்தானல்லானாகிப்
பொல்லாதவகந்தைவேரைப் பறித்தடியோடேசாய்த்து
வல்லானென்றெவரும்வாழ்த்தும் வழிபடுகடவுளாரைச்
சொல்லாமற்றுதிப்பதன்றோ தோத்திரமென்பதாகும்.

81. ஆமெனிலங்குநிற்பா னன்றெனிலில்லையாவான்
தாமெனிற்றம்மில்நிற்பான் தனியென்றாற்புறத்திலாவான்
ஓமென்றதுள்நடிப்பா னுலகெலாம்பரந்துநிற்பான்
வாமனுமனுகாதானை வழுத்தலேதோத்திரங்காண்.

82. மல்கியமக்கள்நம்மை மாமாயையகன்றுசெல்லக்
கல்வினைக்கரையக்காட்டுங் கருணைக்கோநிதியாம்வள்ளல்
தொல்வினைப்பிறப்பறுத்துச் சோதிமாநிதியாம்மௌனச்
செல்வத்தையளித்தநாளே திருநாளென்றோதுவோமே.

83. வாடியமுகமுங்கண்டு வருந்தியமனமுங்கண்டு
தேடியநாட்டங்கண்டு தெளிந்திட்டதேட்டங்கண்டு
பாடியவாக்குங்கண்டு படிந்தமோருளமுங்கண்டே
ஓடிவந்தருள்செய்நாளே யொப்பறதிருநாளாகும்.

84. வழிவழியாகமுன்னோர் வாழ்ந்தனுபவித்துவந்த
அழிவுறாமௌனநாட்டை யவர்வழிமுளைத்தநாமும்
எழில்பெறநமதேயென்று சொந்தமாயெய்துதற்கே
மொழிதரவுகந்தவாழ்வே மூவர்க்குமுற்றவாழ்வு.

85. அளவிலாக்கருணைபொங்கி யணைகடந்தோடிபன்ப
ருளமெனும்வயலிற்பாய்ந்திட் டொப்புயர்வில்லாஞான
விளைதருபயிர்நின்றோங்கி மேன்மேலுஞ்செழிக்கமௌன
வளமெலாம்பொருந்திநின்ற வாழ்வுவானோர்க்கும்வாரா.

86. கிட்டாதபெரியவாழ்வைக் கிடைக்காதசெல்வப்பேற்றை
யெட்டாதமணியையாரு மெடுக்காதபுதையல்தன்னைத்
தட்டாதுநாமேபெற்றுத் தாமெல்லாமாகியொன்றோ
டொட்டாதுநிற்பதன்றோ உயர்வுறவடைந்தசெல்வம்.

87. மறைபடாமணியின்குன்றை மாற்றறியாதபொன்னைக்
குறைபடாவமிர்தந்தன்னைக் கோதிலாச்செழியதேனைக்
கரைபடாச்சுவைக்கற்கண்டைக் கணுவிலாக்கரும்பையென்றும்
புரைபடாப்பெரியவாழ்வைப் பொருந்தினார்செல்வராவார்.

88. மங்காதஞானப்பேற்றை மறையாதஜோதிதன்னைச்
சிங்காதமௌனவின்பத் திரவிபச்சேகரத்தைப்
பொங்காதகாய்ந்தபாலைப் புரையாதபோதவாழ்வைத்
தங்காமற்பெற்றோர்தம்மைச் சம்பன்னரென்றுசொல்வார்.

89. பாசவேரனைத்தும்போக்கிப் பரத்தினையெமக்கோபாக்க
லேசதாய்வழிகள்காட்டி யாசையைப்பெருகமூட்டி
மோசமாயருகிற்சேர்த்து மொழிந்திடாமொழியைப்பேசி
யாசைவல்வினைகளெல்லா மகன்றிடவருளிட்டானே.

90. அசைந்திடாக்காந்தமுன்ன மசைந்திடுமயத்தைப்போல
அசைந்திடவாத்மாமுன்ன மசைந்திடுமற்பமான
பசையிலாப்ரபஞ்சவாழ்க்கை பனித்துளிபோலவென்றும்
அசைந்திடாப்பொருள்நீயென்றும் அறைந்திட்டானருளினாலே.

91. எங்கும்நின்றொளிருமந்த விணையிலாமௌனானந்தம்
பொங்கிநின்றணைகடந்து புண்ணியக்கால்வாய்சென்று
தங்கிநின்றன்பருள்ளத் தடங்களில்நிறைந்துமுன்னம்
மங்கிநின்றிளைத்தஞான மாபயிர்விளைத்ததன்றே.

92. என்பொருட்டெழுந்துமண்மே லிசைத்ததோர்பெரியநன்றிக்
குன்பொருட்டேதுங்காணே னோர்சிறுகைம்மாறேனும்
அன்பினோடாக்கையாவி யனைத்துமேயுன்னதென்றே
முன்புநீபெற்றவன்றே முடிந்ததேயெனதெனும்பேர்.

93. எங்குமுன்னருளதன்றி யிருக்கின்றதில்லையென்னிற்
றங்கியான்வேறுமோ தன்செயலெனவுமுண்டோ
சங்கையில்பெரியஞானந் தந்திடத்தக்கோனான
பொங்குமானந்தவெள்ளப் பூரணபோதவாழ்வே.

94. எனக்குநாவிருக்குமேதாவென் றேங்கியேகேட்பான்போலத்
தனக்குளபோதங்காணத் தவித்துலகல்லாமோடி
யெனக்குநீஞானபோத மிசைந்தளியென்றுகெஞ்சும்
வனப்பிலாமாந்தர்கட்கு வகுப்பதுபயனுமாகா.

95. கங்கையினடுவிற்சென்று நீரிடைமூழ்கிநின்று
இங்குவென்றாகந்திப்பா ரிலேயோவென்றழுவான்போலப்
பொங்குமா போதவெள்ளப் புனலினிலாழ்ந்துநின்றுந்
தங்கிடஞானதீர்த்தந் தந்திடுவென்பதேனோ.

96. நன்மைகள்புரிந்திட்டாலும் ஞானநூலோதிட்டாலுந்
தன்மயமடைந்ததாகச் சமர்த்தினாலுரைத்திட்டாலும்
பின்னெதுபுரிந்திட்டாலும் பேதமின்றிருந்திட்டாலும்
உண்மையைச்சாராதார்க ளுயர்பதமடைவரோதான்.

97. பல்விதமாகநூல்கள் பகர்ந்திட்டபொருளைக்கட்டச்
சொல்லுதற்கரியமௌனி சூக்ஷ்மமாயுருவந்தாங்கி
நல்லடியார்களுள்ளத் தடங்களைப்பார்த்துப்பார்த்து
மல்கிடுமௌனவித்தை மகிழ்வுடன்பதித்துநின்றான்.

98. ஆதியாம்ஞானமென்வித் தடியவருளங்கடோறும்
நீதியாம்முளைகள்காட்டி நிச்சலிலைகள்தோற்றிச்
சோதியாம்கிளைகளோடிச் சொரூபமாமலரையீன்றே
ஓதிடாநிஷ்டைகாய்த்திட் டுயர்பதங்கனிந்ததன்றே.

99. தேடியவுளத்தினின்றான் தெரிசனமளிக்கவந்தான்
வாடியவெமைவளர்க்க வளமெலாம்பொருந்திநின்றான்
நாடியவிடங்கடோறும் நானெனநிறைந்துநின்றான்
பாடியவாக்கில்நின்றான் பாமாலைசூட்டிக்கொண்டான்.

100. அம்புதிநீரைக்கொண்டே யதற்குநீராட்டல்போலுஞ்
செங்கதிரோனையேத்தச் சிறுதீபங்காட்டல்போலும்
எம்பிரானருளெழுந்தே யிசைத்தநூன்மாலைதன்னை
எம்பிரான்மலரடிக்கே யின்புடன்புனைந்துநின்றேன்.

வாழி.

என்னையேயெனக்குத்தந்த வென்குருகருணைவாழி
தன்னையேயடைந்தவெங்கள் சற்குருமரபுவாழி
பின்னையேபிறந்துவாராப் பெரியவர்கூட்டம்வாழி
சின்மயமாக்கியாண்ட சிவசுப்ரமண்யன்வாழி.

திருவருட்கதம்பம் முற்றிற்று.

ஜகஜ்ஜநநீஸத்குரோ.



ஓம் ஸ்ரீமௌனராஜகுருப்யோநம:

# மிருகசீர்ஷன் கண்ட கனவு.

அல்லது

## ஸ்வர்ணஸ்பர்சம்

(சிறுவருக்கான கதை.)

(11-வது பக்கத்தொடர்ச்சி.)

iii

காட்டில் மிருகசீர்ஷனும் அவன்மகளும் எவ்வளவு கஷ்டப்பட்டார்களென்று இங்கு விஸ்தரிப்பதனவசியம். ஆனால் அவர்கள் கஷ்டத்தை ஒருவாறு நிவர்த்திக்க தெய்வாநுகூலமிருந்தது. என்னவெனில் மிருகசீர்ஷனை அவன் சத்துருவாகிய சிற்றரசன் சிறைபிடித்த சமயத்திலேயே அச்சிற்றரசனுடைய குமாரனாகிய இளவரசனுடைய மனதை ஸ்வர்ணலேகை சிறைபிடித்து விட்டாள். அவளுடைய அழகைக்கண்டு மனமிளகி அவளுடைய பரிதாபமான கதியைக்குறித்து அந்த ராஜகுமாரன் தனக்குள்ளேயே கண்ணீர் பெருக்கினன். அவனுக்கு அப்பொழுது வயது சுமார் பன்னிரண்டு தானிருக்கும். அவன் தாய் அவன் தனியே இருக்கையில் வருந்துவதைக்கண்டு அதன் காரணத்தை மெதுவாய்த்தெரிந்து கொண்டாள். சுபாவத்திலேயே நல்லமனதுள்ளவளாகவும் தன் மகனிடத்தில் மிக்கஅபிமானம் வைத்தவளாகவுமிருந்தமையால் அவன் வேண்டுகோளுக் கிணங்கி ஸ்வர்ணலேகைக்கு எப்படியாவது உபகாரம் செய்ய வேண்டிய ஏற்பாடுகளை யோசிக்கலானாள். ஸ்வர்ணலேகையை வளர்த்த தாதியை வரவழைத்து அவள் மூலமாக அவ்விருவருக்கும் காட்டில் வேண்டிய அவசியமான சாமான்களைத் திருட்டுத்தனமாய்க் கொடுத்தனுப்ப ஏற்பாடுசெய்தாள். அந்தத் தாதியும் கண்ணும் கண்ணீருமாக அவைகளைப் பெற்றுக்கொண்டு ஸ்வர்ணலேகையுடன் கூடப்போய் அவ்விருவரையும் வழி யனுப்பிவிட்டு ஸ்வர்ணலேகைக்குத் தேறுதல் சொல்லி புத்திமதி சொல்லிவிட்டு வந்தாள். அப்பொழுது ஸ்வர்ணலேகை எட்டு வயதுக் குழந்தையாதலால் தனக்கு நேர்ந்த கொடுமையை முற்றிலும் உணரவில்லை. ஆனால் அவளுக்காக எல்லா ஜனங்களும் பரிதாப மடைந்தார்கள். அவள் மட்டும் காட்டில் கிளி, குயில், குருவி, மான் இனங்களோடு விளையாடிக் கொண்டே பொழுதுபோக்கக் கற்றுக் கொண்டாள். ஒவ்வொரு சமயம் தன் விளையாட்டு பொம்மைகளையும், தன் பழைய பரிஜனங்களையும் நினைத்துக்கொண்டு அழுதாலும் விசேஷமாய் சந்தோஷமாகவே இருப்பாள்.

மிருகசீர்ஷன்பாடு தான் அதிக கஷ்டமாகிவிட்டது. எப்போதும் தங்கத்திலேயே பழகினவனுக்கு, இப்பொழுது காட்டில், மூங்கில்கழிகளையும், பனைமட்டைகளையும், தென்னைஓலைகளையும் கொண்டு குடிசை கட்டுகிற தென்றால் எப்படியிருக்கும்? முதலில் இவன் கட்டிய குடிசை இரண்டு நாளைக்கெல்லாம் இவன் தலையிலேயே விழ ஆரம்பித்தது. ஆனால் நல்ல வேளையாய் அது விழுகிற சமயத்தில் ஸ்வர்ணலேகை வெளியே விளையாடிக் கொண்டிருந்தாள். அவளுக்காகவாவது நன்றாய் சமையல் செய்யக் கற்றுக்கொள்ள வேண்டியிருந்தது. முதலில் கொஞ்சநாளைக்கு இவன் செய்த சமையல் அவளுக்கு சாப்பிட முடியவில்லை. ஆனால் போகப்போகப் பழக்கத்தினாலேயே இவ்வாழ்வு இருவருக்கும் ஒத்துக்கொண்டு விட்டது. புல்லரிசி, மூங்கிலரிசி, பனங்கிழங்கு முதலிய அபூர்வபதார்த்தங்களெல்லாம் பக்குவம் செய்து தன்மகளுக்குக் கொடுப்பான். காட்டுக்கனிகள், தேன், முதலிய இனிய பண்டங்களை சம்பாதிக்கக் கற்றுக்கொண்டான். ஆகவே இரண்டொரு மாதத்திற் கெல்லாம் காட்டிலிருப்பதே சுகமென்று தோற்றிற்று.

ஆயினும் மிருகசீர்ஷனை பொன்னாசை முற்றிலும் விட்டுவிடவில்லை. தான் பொன் சேர்ப்பதற்காகப் பட்ட கஷ்டங்களை யெல்லாம் நினைத்து மன முருகிப்போவான். அப்படிச்சேர்ந்த பொன்னை யெல்லாம் கண்காணாத இடத்தில் விட்டு விட்டிருப்பது, புதிதாய் கன்று போட்ட தாய்ப்பசுவுக்கு அக்கன்றை விட்டுப் பிரிந்திருப்பது போலிருந்தது. அந்தப்பொன்னெல்லாம் தன் கையிலிருந்தால் இப்பொழுது எவ்வளவு சுகமாய் ஜீவிக்கலாம் என்று தோற்றிற்று. ஒரு சக்கிரவர்த்தியின் வயிற்றிற் பிறந்த மகளை தெருவில் போகும் பிச்சைக்காரக்குட்டியைப்போல் விவாகம்செய்து கொடுக்க இஷ்டமில்லை ஆதலால் தன் மகளைத்தகுந்தபடி விவாகம்செ

ய்து கொடுப்பதற்காகவாவது தான் சேர்த்த பொன்னைத் திருப்பிக் கைப்பற்ற யோசனை செய்தான். தன்னுடைய பழைய சுரங்கம் யாருமறியாத ஓர் மூலையிலிருப்பதை நினைத்து அதற்குள் இருட்டு வேளைகளில் தான் மாறுவேஷம் பூண்டு புகுந்து தன்னால் தூக்கக்கூடிய பொன் திரவியத்தைத் தூக்கிக் கொண்டு வந்து விடலாமென்று யோசித்தான். இவர்களுடைய யோகக்ஷேமத்தை விசாரிப்பதற்காக ஸ்வர்ணலேகையின் தாதியாயிருந்தவள் மறுபடியும் ஒரு தடவை வந்தபொழுது அவளுடன் தன் யோசனையை ரஹஸியமாய் வெளியிடவே, அவளும் இவன் சுரங்கத்துக்குள் தடையில்லாமல் போவதற்கு வேண்டிய உதவி செய்வதாக ஒப்புக்கொண்டாள். அப்பிரகாரம்போல் முதல் தடவையில் கொண்டுவந்த திரவியத்தைக் கொண்டு அக்காட்டிலேயே தனக்கு நல்ல வசதியான ஒரு வீடும் ஒரு வருஷத்துக்குப்போதுமான சாமான்களும் சம்பாதித்துக் கொண்டான். இன்னொரு மாதம் கழித்து மறுபடிபோய் இன்னொரு மூட்டை பொன்னைத் தூக்கிக் கொண்டுவந்தான். இம்மாதிரியாக மாதத்திலிரண்டொரு தடவையாக சுமார் ஒரு வருஷத்தில் சுரங்கத்தில் இருந்த பொன்னெல்லாம் அநேகமாய் வெளியேறி விட்டது. மிகுதியிருந்ததையும் இரண்டு மூன்று தடவைகளில் கொண்டுவந்து விடலாமென்றே நிச்சயித்தான். கொண்டுவந்த வரையில் பூமிக்குள் புதைத்து பத்திரப்படுத்தி விட்டான். அதற்குள் தன் கையிலிருக்கும் பொன்னை எவ்விதத்திலுபயோகிக்கலாமென்று யோசித்தான். தான் வனவாசத்தை விட்டு நகரங்களுக்குள் பிரவேசிப்பதாகத் தெரிந்தால் தன்னைச் சிறையிலடைத்து விடுவார்களாதலால், தன் திரவியத்தைக்கொண்டு மறுபடியும் சேனைகளைச்சேர்த்து யுத்தத்திற்குப்போகத் துணியவில்லை. மேலும் யுத்தத்திற்குப்போனால் ஜயிப்பதென்ன நிச்சயம்? ஆதலால் தன் பழைய ராஜ்யத்தில் தனக்குக்கிடைத்த மட்டும் தன் சத்துருவாகிய சிற்றரசன் சொன்னவிலைக்கு வாங்கி விடுவதே சரி என்று தீர்மானித்தான். எப்படியாவது தன் பழைய ஸ்திதியின் பெருமையில் எள்ளளவாவது கிடைத்தால போதுமென்று தோற்றிற்று. அப்பிரகாரமே பழைய தாதியின் மூலமாகக் கடிதமனுப்பித் தன் அபிப்பிராயத்தை அச்சிற்றரசனுக்குத் தெரிவித்தான். தனக்குப் புதிதாகக்காட்டிலொரு புதையலகப்பட்டிருப்பதாகவும் தன் பழைய ராஜ்யத்திலொரு பாகத்தையாவது தனக்குத் திருப்பிக்கொடுக்கும் பக்ஷத்தில் அப்புதையலைக்கொடுத்து விடுவதாகவும் ஒப்புக்கொண்டான். அதைக்கேட்ட பணத்தாசை பிடித்த சிற்றரசனும் மனமகிழ்ந்து அதற்கு சம்மதித்தான். கடைசியில் இருவருக்கும் பொதுவாக ஒரு சதுரகஜம் நிலத்துக்கு ஒரு பவுனுக விலைபேசி முடிவுசெய்து கொண்டார்கள். அந்தப்பிரகாரம் நிலத்தை அளந்து கொடுக்கையில் மிருகசீர்ஷனுடைய ஆஸ்தியெல்லாம் சேர்ந்து தன் ராஜ்யத்தில் நூற்றிலொரு பங்குக்குக்கூட ஈடாகவில்லை. மிருகசீர்ஷனுடைய மனம் முற்றிலும் திருப்தியடையவில்லை. யாருக்குத்தான் சக்கிரவர்த்தியாயிருந்துவிட்டு ஒரு சிற்றரசனுவதென்றால் மனம் சம்மதிக்கும்?

iv

இருந்தாலும் மிருகசீர்ஷன் அதைரியப்படவில்லை. தான் வாங்கின நிலத்தின் வருமானத்தை யெல்லாம் வெகு ஜாக்கிரதையாய் மிகுத்து வைத்திருந்து இன்னும் அதிக நிலங்கள் வாங்கினன். இம்மாதிரி வாங்கிக்கொண்டிருந்தால் நமக்கெப்பொழுது பாதி ராஜ்யமாவது திரும்பக்கிடைக்குமென்று ஏங்குகையில் அவன் சாய்ந்து கொண்டிருந்த நாற்காலியின்மேல் ஸ்வர்ணமயமான ஜோதி வீசிற்று. அண்ணாந்து பார்க்கையில் ஜன்னலில் புதைத்திருந்த வர்ணக்கண்ணாடியில் எழுதியிருந்த லக்ஷ்மியின் படம் உயிர்த்தெழுந்து இவனைப்பார்த்துக் கிருபை கூர்ந்த பார்வையுடன் மந்தஹாஸம் செய்வது போலிருந்தது.

என் சிறு தோழர்களே, எங்கேயாவது ஒரு சித்திரம் உயிரோடு எழுந்திருக்குமா என்று அவநம்பிக்கைப் படாதேயுங்கள். கதையிற் சொல்லியிருக்கிற காலத்தில் நடந்த அநேக விஷயங்கள் நமக்கு இப்பொழுது ஆச்சரியமாகத் தோன்றுவது போலவே, இப்பொழுது நடக்கும் அநேக விஷயங்களை அக்காலத்திலிருந்தவர்கள் திரும்பி வந்து பார்த்தால் ஆச்சரியப்படுவார்கள் என்பதற்கு சந்தேகமில்லை. இந்தக்காலத்தில் காணப்படுகிற புகைவண்டிகளையும் வியாபாரச்சங்கங்களையும் எப்பேர்ப்பட்ட தந்திரமான

திருடனையும் பிடித்துவிடக்கூடிய சட்டங்களையும் அதற்கேற்ற உத்தியோகஸ்தர்களையும் சாப்பிடுகிற வேலை முதல் தூங்குகிற வேலை வரையில் எல்லாவற்றையும் நாம் செய்வதற்குப்பதிலாக அந்தந்தத் தொழிலில் கற்றுத்தேர்ந்த தொழிலாளிகளைக்கொண்டு நடத்திக்கொள்ளுகிற இக்கால நாகரீகத்தையும் கண்டால் நம்முன்னோர்கள் நிச்சயமாய்த் திகைத்துத் தியங்கிப்போவார்கள். அது எப்படியிருந்தாலுமிருக்கட்டும், மேல் கதையை விசாரிப்போம்.

மிருகசீர்ஷன் கொஞ்ச நேரம் வரையில் தன் கண்களை நம்பவில்லை. இருக்க இருக்க அறை முழுவதும் தங்கமயமான ஜோதி பரவிற்று. மிருகசீர்ஷன் தன்னைத்தானே தைரியப்படுத்திக்கொண்டு அந்த தேவதையை நமஸ்கரித்துத்தலைவணங்கி நின்றான். அந்தத் தேவதையும் இவனை வாழ்த்தி "குழந்தாய் மிருகசீர்ஷா, நீ மிகுந்த பாக்கியசாலி என்பதற்கு சந்தேகமில்லை. உன்னைப்போல் செல்வத்தில் விழுந்து புரண்டு வளர்ந்தவர்கள் கிடையாதென்று தோற்றுகிறது" என்று திருவாய் மலர்ந்தருளினாள்.

மிருகசீர்ஷன் கொஞ்சம் அதிருப்தியுடன் "ஏதோபாதகமில்லை. இருந்தாலும் பிராணனைக் கொடுத்துப் பிராணனைவாங்கி ஆயுள் முழுவதும் பாடுபட்டுச் சேர்த்ததெல்லாம் இவ்வளவு தானா என்று யோசிக்கையில் மனவருத்த முண்டாகிறது. ஒரு ஆயிரவருஷகாலமாவது ஜீவித்திருந்தால் ஏதோ பணக்காரனென்று பெயரெடுக்கலாம்" என்றான்.

"இதென்ன ஆச்சரியம்! ஆனால் உனக்கின்னும் திருப்தியாக வில்லையா?" என்று அந்த தேவதை கேட்டாள்.

மிருகசீர்ஷன் "இல்லை" என்று தலையசைத்து உதட்டைப்பிதுக்கினான். "ஆனால் உனக்கெவ்வளவு கிடைத்தால் திருப்தியாகும்?" என்று தேவதை கேட்டாள்.

மிருகசீர்ஷன் யோசித்துப் பார்த்தான். 'இவ்வளவு சந்தோஷகரமாய் பிரகாசிக்கிற முகத்தோடும் தயவு மிகுந்த பார்வையோடும் கூடிய இத்தேவதை நாம் கேட்டதையெல்லாம் கொடுத்து நம்மைத்திருப்தி செய்வதற்காகவே வந்திருக்கிறாள்' என்று நினைத்தான். இந்த சமயத்தைக் கைநழுவ விடக்கூடாதென்று தோற்றிற்று. ஆதலால் என்னவரம் கேட்கலாமென்று வெகுநேரம் யோசித்தான். பொன்மலைமேல் பொன்மலையாகக்குவித்துப் பார்த்தான். எவ்வளவு குவித்தாலும் இவனுக்குத் திருப்தியாகுமென்றுதோற்றவில்லை. கடைசியில் பளிச்சென்று மின்னல்போல் ஒருயோசனை பிறந்தது. பொன் சேர்ப்பவனுக்கு அதைக்காட்டிலும் பொன்னான யோசனை வேறு கிடைக்காது. தலைநிமிர்ந்து தேவதையைப்பார்த்தான்.

"என்ன மிருகசீர்ஷா, கடைசியில் உனக்குத்திருப்தியான யோசனையாக ஏதோ ஒன்று பிறந்திருக்கிறதென்று தெரிகிறது. உன் உள்ளத்தைச்சொல்" என்று தேவதை சொன்னாள். "நான் கேட்கப்போகிறது இவ்வளவு தான். எனக்கு அங்குமிங்கும் ஓடியாடி ஒவ்வொரு பவுனாகச் சேர்க்கிறதென்றால் பெரிய தொந்திரவாயிருக்கிறது. கடைசியில் எவ்வளவு சேர்த்தும் இவ்வளவுதானா என்று போய்விடுகிறது. ஆதலால் நான் தொட்டதெல்லாம் தங்கமாகப்போகும்படி வரமளித்தீர்களானால் என் ஜன்மம் சரியான பலனையடைந்த தாகும்" என்றான்.

இதைக் கேட்டவுடன் அத்தேவதையின் முகத்தில் சூரியோதய காந்திபோல் புன்னகை பிறந்தது.

"ஸ்வர்ண ஸ்பர்சமா கேட்கிறாய்? உனக்கு இவ்வளவு நல்லயோசனை எப்படிபிறந்தது! உன்னுடைய புத்தி நுட்பத்தை நான்மிகவும் மெச்சிக்கொள்கிறேன. ஆனால் இந்த வரம் மட்டும் கிடைத்து விட்டால் நீ முற்றிலும் திருப்தியடைந்து விடுவாய் என்பது நிச்சயந்தானா?" என்று தேவதை கேட்டாள்.

மிருகசீர்ஷன் "அதற்குத்தடை என்ன?" என்றான். தேவதை "பின்னிட்டுக்கொஞ்சம் கூடவருத்தப்பட மாட்டாய் என்பது நிச்சயம் தானா?" என்றாள்.

"வருத்தத்துக்குக் காரணமேது? என்னைத்திருப்திசெய்ய இதற்குமேல் நான் வேறொன்றுங் கேட்கவில்லை" என்றான்.

"நாளையதினம் காலையில் தூங்கி எழுந்ததும் உன் பிரார்த்தனை நிறைவேறும்" என்று சொல்லி வாய்மூடு முன்னே அத்தேவதையின் காந்தி விருத்தியாகி அறை முழுவதும் மின்னல்போல் கண்கூசும்படி பிரகாசிக்கவே மிருகசீர்ஷன் கண்ணை மூடினான். கண்ணைத் திறந்ததும் எப்போதும்போல் அறையும் படங்களுந்தானிருந்தன.

# *அவிழ்த்து விட்டகழுதை.

(தொடர்ச்சி)

I. பாலியம் (தொடர்ச்சி.)

———:o:———

என்னை முதல் முதல் என் தகப்பனுர் பள்ளிக்கூடத்துக் கழைத்துக்கொண்டுபோனது என் ஞாபகத்தில் நன்ருய்ப்பதிந்திருக்கிறது. காலை 8-மணிக்குப்பழையமுது சாப்பிட்டுவிட்டுப்போனேன். பள்ளிக்கூடத்து வாசலில் சில போக்கிரிப் பையன்கள் ஒரு நாயின்வாலில் ஒரு சிறு பழையதகரப்பெட்டியைக்கயிற்றில் முடிந்து கட்டிவிட்டு, அது ஓடும்பொழுது தகரப்பெட்டி தரையில் இழுபட்டுப் "படபட" வென்று சப்திக்க அந்த நாய் வெருண்டு இன்னும் அதிகவேகமாய் ஓடுவதைக்கண்டு சிரித்துக்கொண்டிருந்தார்கள். இப்பொழுது யோசித்துப்பார்க்கையில் உலகத்து மாந்தர்களின் வாழ்க்கைக்கு அந்த நாயின் கதியையே ஒப்பிடலாமெனத் தோற்றுகிறது. இப்படித்தான் நாமும் வீண் டம்பமென்னும் ஓட்டைத்தம்பட்டத்தைக் கட்டிக்கொண்டு, உலகத்தில் கீர்த்தி அபகீர்த்தி என்னும் இரைச்சலுக்குப்பயந்து கண்டோர் நகைக்க ஒடிக்கொண்டிருக்கிறேம். பள்ளிக்கூடத்துக்குள்ளே கடியாரம் எட்டு மணி அடித்தது. அப்பொழுதுதான் நான் முதல் முதல் கடியாரத்தைப்பார்த்தேன். அன்று சாயந்திரம் வீட்டுக்குப்போகும்போது தள்ளிக்கொண்டிருந்த காளையை நுகத்தடியிற் பூட்டியதுபோலும், காட்டிலிருந்த புலியைக் கூட்டிலடைத்தது போலுமிருந்தது. புஸ்தகங்களை என்கையில்கொடுத்துவிட்டு என்னிஷ்டப்படி வாசிக்க விட்டுவிட்டால் எனக்கு வாசிக்க சம்மதந்தான். சந்தோஷமாகவும் வாசித்திருப்பேன். பிறருடைய கட்டாயத்துக்காக வாசிக்கிறதென்ருல் எனக்குக்கஷ்டமாயிருந்தது.

என்னுடைய முட்டாள்தனம் அப்பொழுதே வெளிப்பட்டுவிட்டது. ஒருநாள் எங்கள் வாத்தியார் பாடபுஸ்தகத்தில் அர்த்தம் சொல்லப்பட்டிருந்த சில தமிழ் வார்த்தைகளைக்கொடுத்து அவைகளுடைய அர்த்தத்தைப்புஸ்தகம் பாராமல் கற்பலகையில் எழுதும்படி சொல்லிவிட்டு நாற்காலியில் சாய்ந்து தூங்கிக்கொண்டிருந்தார், என் பக்கத்திலிருந்த ஒருதடிப்பையன், கொடுத்திருந்த வார்த்தைகளில் ஒன்ருகிய தெய்வம் என்கிற வார்த்தைக்கு அர்த்தம் தெரியாமல் என்னைச்சொல்லிக்கொடுக்கும்படி கேட்டான். எனக்கு நடுக்கமுண்டாயிற்று. பள்ளிக்கூடத்துப்பரீக்ஷைகளில் ஒருவரை யொருவர் கேட்டாவது பார்த்தாவது எழுததல் கூடாது என்று எல்லோருக்கும் தெரிந்தவிஷயம். அப்படி எழுதினவர்களைத் தகுந்தபடி தண்டனைசெய்யப்படும். ஆனல் நான் சொல்லிக்கொடாவிட்டாலோ பள்ளிக்கூடம்விட்டு வெளியேபோனதும் அந்தப்பையன் என்னை தண்டனைசெய்துவிடுவான். வாத்தியார் எங்கே கண்ணைத் திறந்துவிடுகிருரோ, அல்லது கண்ணை மூடிக்கொண்டு காதைமட்டும் திறந்துகொண்டிருக்கிருரோ என்று பயமாயிருந்தது. அந்தத்தடிப்பயல் கொஞ்சங்கூடக் கூச்சமில்லாமல் தாராளமாய் இரைந்து கேட்க ஆரம்பித்தான். நான் அவன் வாயையடக்குவதற்காக வாத்தியாருடைய நாற்காலியைப்பார்த்துக்கொண்டே "தெய்வம்" என்னும் வார்த்தைக்கு அர்த்தமாகிய "கடவுள்" என்னும் வார்த்தைக்கு முதலெழுத்தாகிய "க" என்னும் அக்ஷரத்தை மெதுவாய் உச்சரித்தேன். பாடத்தை ஒருதரமாவது படித்திருந்தால் எவனுக்கும் நான் சொன்னதைக்கொண்டே 'கடவுள்' என்கிற வார்த்தை ஞாபகத்துக்கு வந்திருக்கும். புஸ்தகத்தில் 'கடவுள்' என்கிற ஒரு அர்த்தம் தான் சொல்லப்பட்டிருந்தது. அந்த அர்த்தம் தான் வாத்தியாருக்கும் தெரியும். எங்களுக்கும் சொல்லிக்கொடுக்கப்பட்டிருந்தது. அதைத்தவிர வேறொன்றையும் வாத்தியாரும் ஒப்புக்கொள்ளமாட்டார். எங்களுக்கும் கற்றுக்கொள்ள இஷ்டமில்லை. மூத்தோர்களைப்போலவே நாங்களும் கடவுள் என்னும் வார்த்தையைப்படித்தோமேயன்றி வஸ்துவையறிய விரும்பவில்லை. இப்படியிருக்க அந்தப்பையன் மட்டும் எப்படியோ தெரியவில்லை, "க" என்கிற சப்தத்தைக் கேட்டவுடனே "கடா மாடா?" என்ருன். வாயைத்திறக்க பயந்துகொண்டு நான் அல்லவென்று தலையசைத்தேன். நாளைக்கும் நான் "ஆம்" என்று தலையசைப்பதற்கும் 'அல்ல' வென்று தலையசைப்பதற்கும் வித்தியாசம் கண்டுபிடிப்பது கஷ்டம். அந்தப்பையன் நான் ஆம் என்று சொன்னதாகத்தெரிந்துகொண்டு "கடா மாடு" என்றே எழுதிவிட்டான். அது எனக்குத்தெரியாது. வாத்தியார் எழுந்து வந்து எங்கள் பலகைகளைப் பரிசோதிக்கையில் இவன் மட்டும் 'கடா மாடு' என்று எழுதியிருந்ததைக்கண்டு ஆச்சரியப்பட்டுக் கோபத்துடன் சிரித்துக்கொண்டு "எந்தப்போக்கிரி உனக்கிந்த அர்த்தம் சொல்லிக்கொடுத்தது?" என்று கேட்டார். தான் தப்பினுற் போதுமென்று அந்தத்தடிப்பயல் என்னைக்காண்பித்து விட்டான். அந்த சமயத்தில் எனக்கிருந்த கோபத்துக்கு சமணர்களைக் கழுவேற்றின சம்பந்தசுவாமிகள் மட்டும் உயிரோடிருந்தால் அபசார வார்த்தை யெழுதிய இந்தப்பையனையும் அவரிடம் ஒப்புக்கொடுத்திருப்பேன். வாத்தியாரோ வென்ருல் என்னையே குற்றவாளியாகப்பாவித்து "கள்ளனை நம்பினுலும் குள்ளனை நம்பக்கூடாதென்று" என்கையை நீட்டச்சொல்லிப் பிரம்பினல் ஆறடி அடித்தார். எனக்கிருந்த கோபத்தில் பதில் சொல்ல இஷ்டமில்லை. வந்த அழுகையெல்லாம் தொண்டையி லடைத்துக்கொண்டது. முகம் சிவந்துவிட்டது. வீட்டுக்குப்போய் புஸ்தகத்தை யெறிந்துவிட்டுத் தனிமையில் தாராளமாய் அழுதேன்.

* தன்னையறிந்து தன் தொழிலில் பிரவேசிக்கும் மனேதர்மசக்தி தடையறியாது.

நாளைக்கும் நாலுபேரெதிரில் அழுகிறதென்றால் எனக்கு வெட்கம். யாராவது என் தாய் தகப்பன் பெண்டாட்டி பிள்ளை செத்தால் பட்டும் போனாப் போகிறதென்று அழுவேனேயொழிய சாதாரணமாக மற்ற சந்தர்ப்பங்களில் அழமாட்டேன். சகஜமாக நான் அழுவேனென்று எல்லோரும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கையில் அவர்களை ஏமாற்றுவது சரியல்ல. அந்த அழுகைகளெல்லாம் உபசாரஅழுகைதான். அவைகளுக்கு யாதொரு அர்த்தமுமில்லை. மற்றசமயங்களில் எவ்வளவு அந்தரங்கசிநேகிதனுடைய பார்வையிலும் அழுகிறதென்றால் முத்துக்களைவாரிக் கோழியெதிரில் இறைப்பதுபோலத்தான்.

கடாமாட்டுக்கும் கடவுளுக்கும் என்னசம்பந்தமென்று எனக்கும்இன்னும் ஏற்படவில்லை. என்ன காரணத்தினால் அந்தப்பையன் அப்படி ஒன்றுக்கொன்று வித்தியாசம் தெரியாமல் எழுதினானென்று தெரியவில்லை. யமனைக் கடவுளா பாவித்தாலும் அவனுடைய வாஹனத்துக்குக்கூட அந்தப்பெயர் தகுமா என்று சந்தேகமுண்டாகிறது. வேறு சிலர் யஜமானனுக்குள்ள மரியாதை வாஹனத்துக்கே செய்யலாமென்றும் "கடா" என்பது ஆண் எருமைக்கும் ஆண் பசுவுக்கும் பொதுப்பெயரென்றும், ஆதலால் அந்தப்பையன் எழுதினது பரமசிவனையே குறிக்குமென்றும் சொல்லுகிறார்கள். இந்த விவகாரத்தை சந்தேகமறத்தீர்ப்பவர்களுக்கு மிக்க வந்தனமுள்ளவனாயிருப்பேன். அவன் பூஜை செய்த தெய்வம் அவனை இன்னும் ஐக்கியம் செய்து கொள்ளாதிருக்கும் பக்ஷத்தில் அந்தப்பையனையே கூடுமானால் நேரில்கண்டு சந்தேகம் தெளிந்துகொள்ள இஷ்டந்தான்.

இன்னொருதடவை ஒருநாள் எங்கள் வீட்டில் சிராத்தம் நடந்தது. அன்றையதினம் நான் சாப்பிட்டு விட்டுப்பள்ளிக்கூடம் போகும்பொழுது தினம் போகவேண்டிய நேரத்துக்கு மேலதிகமாகிவிட்டது. அதே பள்ளிக்கூடத்தில் மெட்றிகுலேஷன் வகுப்பில் படித்துக்கொண்டிருந்த என் அத்தானும் என்னுடன் வந்தார். அதுவரையில் நான் நேரம்கழித்துப் பள்ளிக்கூடத்துக்குப்போனதில்லை; நேரம் கழித்துப்போவது தப்பிதமென்றாவது அதற்கு இன்ன தண்டனை என்றாவது எனக்குத்தெரியாது. என் அத்தான் என்னைப்பள்ளிக்கூடத்து வரையில் கொண்டுவந்துவிட்டு "வீட்டில் சிராத்தமானபடியால் நேரமாகிவிட்டதென்று சொன்னால் வாத்தியார் உன்னை ஒன்றுஞ் செய்யமாட்டாரென்று" சொல்லிவிட்டுத்தான் ஏதோ வேறு வேலையாய் அவசரமாய்ப் போகவேண்டுமென்று போய்விட்டார். எனக்கு என்னசெய்கிறதென்று ஒன்றுந்தோன்றவில்லை. வேலையாய்ப்போகிற அத்தானைத் திருப்பிக்கூப்பிட தைரியமில்லை. எங்கள் வீட்டில் நடந்த சிராத்தத்தை நடுப்பள்ளிக்கூடத்தில் எல்லாரெதிரிலும் எனக்கு சாக்ஷியாக இழுக்க சம்மதமில்லை. ஒன்றுஞ் சொல்லாவிட்டால் நேரம்கழித்துப்போனதற்காக வாத்தியார் அடிப்பார் என்கிற பயமுமிருந்தது. எனக்கோ வாத்தியார் முகத்தைப்பார்த்துப் பேசுகிறதற்கே பயம். அப்படியிருக்க இவ்வளவு ஆக்ஷேபனை சமாதானங்களை அவரிடத்தில் நான் எப்படி வாய்திறந்து பேசப்போகிறேன்? என்னை என் அத்தானே நேரில் பள்ளிக்கூடத்துக்குள் கொண்டுவந்துவிட்டு வாத்தியாரிடத்தில் சமாதானமும் சொல்லிவிட்டுப் போவாரென்றிருந்தேன். கடைசியில் எனக்கு ஒரு அபூர்வ யோசனை பிறந்தது. நான் படித்துக்கொண்டிருந்த பள்ளிக்கூடத்திற்குக் கொஞ்சதூரத்தில் இன்னொரு பள்ளிக்கூடமிருந்தது. இரண்டு பள்ளிக்கூடங்களும் ஒன்றுக்கொன்று போட்டியாய் நடத்தப்பட்டுவந்தன. நான் உடனே நேராக அடுத்த பள்ளிக்கூடத்துக்குப் போய்விடுகிறதென்று தீர்மானித்தேன். அப்படியே போகவும் போய்விட்டேன். ஆனால் பழகின வாத்தியாரிடத்திலேயே முகத்தைப்பார்த்துப் பேசப்பயந்த நான் புதுவாத்தியாரிடத்தில் எப்படி தைரியமாகப் பேசத்துணிந்தேனென்பது எனக்கே இப்பொழுது ஆச்சரியமாயிருக்கிறது. ஒருக்கால் அவர் முன் பின் பாராத புது வாத்தியாராயிருந்ததனால் தானோ என்னவோ! ஏனெனில் ஒருவாத்தியாரும் போன முதல்நாள் என்னை அடிக்கமாட்டாரென்று ஒரு நம்பிக்கையுண்டு. ஆனால் புதுவாத்தியார் முகத்தைப்பார்த்த உடனே என் நம்பிக்கையெல்லாம் பறந்தோடிவிட்டது. ஏனெனில் வந்த உடனே சம்பளம் கொண்டுவந்தாயா என்றுகேட்டார். நான் சம்பளத்தைப் பற்றி நினைக்கவேயில்லை. நாளைப்பொழுது விடியாமலிருக்க வேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டே நாளைக்கு சம்பளம் கொண்டுவருகிறேனென்று பதில் சொல்லிவிட்டு அன்றையப் பொழுதைப்போக்கினேன். அன்று சாயந்திரம் பள்ளிக்கூடம் கலைந்து வீட்டுக்குப்போகையில் என் பழைய பள்ளித் தோழர்களுடைய கண்ணிலகப்படாமலிருக்கவேண்டுமென்று என் புதிய தோழர்களுக்கு மத்தியில் புகுந்துகொண்டு தலைமறைவாய் வீட்டுக்குப் போக யத்தனித்தேன். இருந்தாலும் எவனோ ஒரு பாவிப் பயல் என்னைக்கண்டுபிடித்து என் சரித்திரத்தை விசாரித்துப் பழைய வாத்தியாரிடத்தில் சொல்லிவிட்டான். நானும் மறுநாள் எப்பொழுதும்போல் பழைய பள்ளிக்கூடத்துக்கே போனேன். ஏனெனில் சம்பளம்மில்லாமல் புதிய வாத்தியாரிடத்தில் எப்படிப்போகிறது? மறுநாளும் முன்போலவே பிரம்பினால் ஆறடி வாங்கிக்கொண்டேன். முன்போலவே தனிமையில்போய் அழுதேன். என்னைவிடப்பெரியவர்கள் செய்த யோசனைகளைப்போலவே என்னுடைய அற்பபுத்தியால் முதல் முதல் தீர்மானித்த யோசனையும் பணமில்லாமையினால் நிறைவேறாமல் போயிற்று. அந்தக்குறை என்னைவிட்டு இன்னும் நீங்கவில்லை.

இன்னொரு நாள் வீட்டுவாசலில் தென்னைமரத்து நிழலில் ஒருநாய்க்குட்டி படுத்திருந்தது. நான் அதை அடித்துத்துரத்துவதற்காக ஒருகல்லை எறிந்தும் அது பயப்படாமல், என்னைக்கடிக்கவும் வாராமல், எழுந்து வாலை ஆட்டிக்கொண்டு என்னிடத்தில் ஸ்நேகம் பாராட்டுவதுபோல் என் முகத்தைப்பார்த்துக்கொண்டு நின்றது. நான் அதைக்கண்டு மனமிரங்கி அதன் சமீபத்தில் போனேன். அது என்னை ஒன்றுஞ்செய்யாமல் வாலை இன்னும் அதிகமாக ஆட்டிற்று. அன்றையதினம் நான் அதற்குக்கொஞ்சம் சோறு கொண்டுவந்து போட்டேன். அது முதல் எங்களிருவருக்கும் உறுதியான ஸ்நேகமுண்டாகிவிட்டது. தினம் திருட்டுத்தனமாய் அதற்கு நான் சோறு கொண்டுவந்து வைப்பேன். ஏனெனில் நான் பிராமணனாகையால் நாய் வளர்ப்பதாகத் தெரிந்தால் வீட்டிலுள்ளவர்கள் என்னை அடிப்பார்கள். ஆனால் அந்த நாய்க்கு இந்த சங்கதிதெரியாதென்று ஏற்பட்டது. ஏனெனில் அது எப்போதும் என்னையே சுற்றிக்கொண்டிருக்க ஆரம்பித்தது. ஒருவாரத்துக்கெல்லாம் வீட்டில் ஒரு சிராத்தம் நடந்தது. அன்றையதினம் நான் அவசரமாய் வீட்டுக்குள் நுழைகையில் இந்த நாய் என்னையறியாமல் என் பின்னால் தானும் விருந்துக்கழைக்கப்பட்ட பிதிருதேவதைகளில் ஒன்றாகப்பாவித்து வாசற்படியைத் தாண்டிவிட்டது. நான் கதவைச்சாத்துகிறதற்காகத் திரும்பிப்பார்க்கையில் இந்த நாய் என் பக்கத்தில் நிற்கக்கண்டு அதைக்காலால் வெகு வேகமாய் உதைத்தெறிந்தேன். அது அலறிப் புடைத்துக்கொண்டு நடுவாசலில்போய் விழுந்தது. விழுந்து அரைநாழிகை வரையில் எழுந்திருக்க மாட்டாமல் பிராணன் போவதுபோல் ஊளையிட்டுக்கொண்டு கிடந்தது. நல்ல வேளையாய் அதன் வரவை வீட்டில் யாரும் பார்க்கவில்லை. ஆனால் அதை நான் உதைத்ததையும் அப்பொழுது அதுபோட்ட கூச்சலையும் கேட்டு உள்ளேயிருந்தவர்கள் என்னவென்று பார்ப்பதற்காக வெளியேவந்தார்கள். ஏற்கனவே நான் நாய் வளர்க்கிறேனென்றும் அதற்குத் திருட்டுத்தனமாய்ச் சோறு போடுகிறேனென்றும் என்பேரில் சந்தேகமுண்டு. இப்பொழுது நான் நிற்கும் நிலைமையையும் நாய் கிடக்கும் நிலைமையையும் பார்த்தவுடன் சந்தேகம் தெளிந்தது. அன்றைக்கு எனக்கு நல்ல பூசைகிடைத்தது. இருந்தாலும் அந்த நாய் இறந்துவிடுமோ! ஒருக்கால் நம்மை ஜீவஹத்தி தோஷம் பிடித்துக்கொள்ளுமோ! என்று நான் பயந்திருந்தமையால் அது பிழைத்தெழுந்த சந்தோஷத்தில் நான்பட்ட அடி பெரிதாகத்தோன்றவில்லை. அன்று சாயந்திரம் அந்த நாயினிடத்தில் தனிமையில்போய் மன்னிப்புக்கேட்டுக்கொண்டு அன்றுடன் நாய் வளர்ப்பதை விட்டேன்.

மேற்கூறிய சந்தர்ப்பங்களில் சாட்டப்பட்ட குற்றங்களுக்கு இதுவரையில் ஜவாப்புசொல்ல எனக்கு அவகாசம் கிடைக்கவில்லை. இப்பொழுது சொல்லித்தீர்த்துவிட்டேன்.

இம்மாதிரியாக என்னுடைய அறியாமையையும் பேசத்தெரியாமையையும் பார்ப்பவர்களுக்குக் கபடமென்றும் போக்கிரிதனமென்றும் தோன்றும்படி செய்துகொள்ளுகிற சக்தி எனக்குத்தானிருக்கிறதென்று நினைக்கிறேன். இன்னும் நான் அந்த சக்தியை இழந்துவிடவில்லை. நான்பட்ட கஷ்டங்களெல்லாம் விசேஷமாக இதன் மூலமாகத்தான்.

(இன்னும்வரும்.)

---

# HAMLET, THE TRANSCENDENTALIST.

(FROM SHAKESPEARE).

# ஹேமசந்திரஸிங் என்னும் ஆத்மவிசாரி.

(ஆங்கிலத்தின் மொழிபெயர்ப்பு.)

*By Sri Rajanayaki.* ஸ்ரீராஜநாயகி.

---

## நான்காவது அங்கம்.

### காக்ஷி. 6.

இடம்:—வேறொரு அறை

காலம்:—காலை.

(ஹரிராஜஸிங்கும் ஒரு சேவகனும் வருகிறார்கள்.)

ஹரிரா:—யாரப்பா அது, என்னைப்பார்க்கவேண்டுமென்று சொன்னது?

சேவகன்:—யாரோ இரண்டு பைராகிகள்.

பைராகிகள் (உள்ளே):—ஜய ஸீதாராம், ஜய கௌரி சங்கர்!

சேவகன்:—தங்களுக்குக் கடிதம் கொண்டுவந்திருக்கிறார்கள்.

ஹரிரா:—அவர்களை அழைத்துவா. (சேவகன் போய்விடுகிறான்.) எனக்கு யார் கடிதம் எழுதப்போகிறார்கள்! ஹேமசந்திர ஸிங்கினிடத்திலிருந்துதான் வந்திருக்க வேண்டும்.

(இரண்டு பைராகிகள் வருகிறார்கள்.)

முதல் பைராகி:—வந்தனம் மகாராஜ்! பகவான் தங்களுக்கு கிருபை செய்வார்.

ஹரிராஜ:—வந்தனம் உங்களுக்கு மப்படியே.

முதல் பைராகி:—அவர் இச்சா சக்திப்படி செய்வார். தங்களுக்கு ஒரு பத்திரிகை இருக்கிறது, கிரஹித்துக்கொள்ள வேண்டும்-பூனாவுக்குப்போன ராஜப்பிரதிநிதிகளிடத்திலிருந்து வந்திருக்கிறது-விலாஸம்-ஹரிராஜஸிங் என்று எழுதியிருக்கிறது, தங்கள் நாமதேயம் அது தானே?

ஹரிராஜ:—ஆம். (என்று கடிதத்தை வாங்கிப் படிக்கிறான்.) "தாங்கள் இக்கடிதத்தைப்படித்து முடிந்ததும், இதைக்கொண்டுவரும் பேர்வழிகளை ராஜ சமுகத்திற் கழைத்துப்போங்கள். ராணா அவர்களுக்கு முக்கியமான கடிதங்கள் கொண்டுவந்திருக்கிறார்கள். நாங்கள் நமது ராஜ்யத்தின் எல்லை தாண்டினதும், அஸ்தமன வேளையில் எங்களைக் கொள்ளைக்காரர்கள் வளைத்துக்கொண்டார்கள். சற்றேறக்குறைய எங்களுடைய ஸைநியங்களும் அவர்கள் கூட்டமும் தொகையில் ஸரிஸமமாக விருந்தமையால் சண்டை வெகு நேரம் உற்சாகத்தோடு நடந்தது. ஆயினும் நம்முடைய ஸைநியங்களே கடைசியில் ஜயித்தன. கொள்ளைக்காரர்களெல்லாம் மூலைக்கொருவராக ஓடிப் பதுங்கி விட்டார்கள் ஓடுகிற ஓட்டத்தில் ஒரு தடிப்பயல் என்னை அப்படியே நெட்டிபொம்மைபோல் தூக்கித்தோளில் போட்டுக்கொண்டு ஓடி விட்டான். வாலி கூட ராவணனை அவ்வளவு சுலபமாய்த்தூக்கி யிருக்கமாட்டான். அவன் என்மேல் எதற்காகக்குறிப்பு வைத்திருந்தானோ தெரியவில்லை. ஆனால் அவன் எதிர்த்து வந்த இடத்திலெல்லாம் நம் ஸைநியங்கள் கொஞ்சம் பயந்து பின்வாங்க ஆரம்பித்தமையால் அவர்களுக்கு தைரியம் பிறக்கும்படி நான் அவனையே குறிப்பாக எதிர்த்துச்சென்றேன். முடிவில் நான் மட்டும் இவர்களிடத்தில் கைதியானேன். கடோர்க்கஜசேனனுக்கும் உக்கிர ருத்திரப்பிரதாபனுக்கும் நான் அகப்பட்டுக்கொண்டது தெரியாது. தெரிந்தால் என்னை விடுவிக்கும் பொருட்டுத் திருடர்களைத் துரத்திக்கொண்டு வருவார்கள். நான் எல்லோரோடுங் கூட என் பல்லக்குக்குத் திரும்பிவிட்டேனென்றிருக்கிறார்கள் பல்லக்கிலும் கதவுகள் மூடியிருக்கும். ஆதலால் அவர்கள் நான் இல்லாததைக் கண்டுபிடிக்க ஒருநாள் செல்லும். அதற்குள்நாங்கள் நாலுகாதம் அவர்கள் நாலுகாதமாக இருவருக்கும் இடையில் எட்டுக்காததூரம் ஏற்பட்டிருக்கும். இவர்கள் என்னை இன்னாரென்று தெரிந்துகொண்டதும் கூடியமட்டும் மரியாதையாகவே நடத்தி வந்தார்கள். என்னால் இவர்களுக்கு ஆகவேண்டிய காரியம் சில இருக்கிறபடியால் என் பணப்பையிலிருந்து என்னை விடுவித்து உதயபுரிக்குப்போய்ச்சேரும் வரையில் துணையும் அனுப்பினார்கள். ராணா அவர்களுக்கு அனுப்பியிருக்கிற கடிதங்களை அவரிடத்தில் சேர்ப்பித்து விட்டுத் தாங்கள் மனோவேகமாக என்னிடம் வாவும். பேசவேண்டிய விஷயம் எட்டிலடங்காது. காதால் கேட்டால் ஒன்றுக்கும் ஆச்சரியமடையாத நீங்களே ஆச்சரியப்படுவீர்கள். நான் இருக்கிற இடம் இக்கடிதம் கொண்டுவரும் பைராகிகளுக்குத்தெரியும்."

நல்லது என் பின்னோடு வாருங்கள். உங்கள் கடிதங்களை ராஜ சமுகத்திற் சேர்ப்பிக்கிறேன். பிறகு நீங்கள் என்னை இக்கடிதம் எழுதிக்கொடுத்தவரிடத்திற்கு அழைத்துப்போக வேண்டும். சீக்கிரமாய்ப்போவோம், வாருங்கள்.

(எல்லோரும் போய்விடுகிறார்கள்.)

## காக்ஷி. 7.

இடம்:—அரண்மனையில் வேறொரு அறை.
காலம்:—பகல்.

(ராணாவும் லக்ஷ்மணஸிங்கும் வருகிறார்கள்)

ராணா:—இனிமேலாவது நம்பேரில் குற்றமில்லை என்பது ஏற்பட்டதா? நீ இவ்வளவு தூரம் நாம் சொன்னதைக் கவனித்துக்கேட்ட பிறகு, உன் தகப்பனாரைக்கொன்ற பேர்வழியே நம்முயிரையும் அபகரிக்கப்பார்த்தான் என்பதும், ஆதலால் அவன் நமக்கும் விரோதியாயிருக்க, அவன் உன் பிதாவைக் கொன்ற விஷயத்தில் நமக்கு யாதொரு சம்பந்தமுமிருக்க நியாயமில்லை என்பதும், இப்பொழுது அவனுடைய விரோதத்தினால் நம்மிருவருக்கும் ஏற்கனவே இருக்கிற சிநேகம் இன்னும் விருத்தியாகக்காரணமுண்டாயிருக்கிறதென்பதும் உனக்கே தெளிவாய் விளங்குகிறதல்லவா?

லக்ஷ்மண:—ஆம், அது வாஸ்தவந்தான். ஆனால் அவனுடைய தீங்கு நிறைந்த குற்றங்களைத்தாங்கள் கொஞ்சங்கூட தண்டிக்காமல் ஏன் அவனை சும்மா விட்டு விட்டீர்கள்? தங்களுடைய சொந்த க்ஷேமத்தைக்கருதியாவது அவனை அப்பொழுதே யமலோகத்துக்கனுப்பி யிருக்கவேண்டாமா?

ராணா:—அதற்கு முக்கியமாய் இரண்டு காரணங்களுண்டு: அவை உனக்கு அவ்வளவு தகுந்த காரணங்களாகத் தோற்றாமலிருக்கலாம். ஆனால் நமக்கு மட்டும் அவை பலமான காரணங்களாகத் தானிருக்கின்றன. முதலாவது: அவன் தாயாராகிய நமது ராணி அவனைத்தினம் ஒருதரம் பாராவிட்டால் சாப்பிட மாட்டாள். நாமோ— நம்முடைய கிரஹசாரமோ, நல்லதிஷ்டமோ, துரதிர்ஷ்டமோ, தெரியவில்லை—அவனைத்தினம் மூன்றுதடவை பாராவிட்

டால் தூக்கம் வருகிறதில்லை. ஆதலால் அவனை அவள் கண்ணெதிரிலேயே நாம் தண்டிக்கக்கூடவில்லை. இரண்டாவது: இந்தப்பாழும் ஜனங்கள் அவனிடத்தில் ஏதோ பிரமை வைத்திருக்கிறதுகள். விகடமாய்ப்பேசுகிருனென்றே, அல்லது எல்லாருக்கும் தடையின்றி சுலபமாய் தரிசனம் கொடுத்து அவரவர் அந்தஸ்துக்கு மேலாகவே மரியாதை செய்கிருனென்றே தெரியவில்லை, இந்நாட்டு ஜனங்களெதிரில் நாம் இவனைத்தண்டிக்கப்புகுந்தால், அவர்கள் அத்தண்டனைகளையே அவனுக்குப் பூஷணமாகச்செய்து நம்பேரில் எதிர்த்துப்பாய ஆரம்பிப்பார்கள் போலிருந்தது. ஆதலால் நிறுத்தி விட்டோம்.

லக்ஷ்மண:—ஆகக்கூடி நான் என் பிதாவை இழந்ததும், அழகிலும் குணங்களிலும் நேர் நிகரில்லாத என் அருமைச்சகோதரிக்குப் பைத்தியம் பிடித்ததும் தான் மிச்சமோ? இருக்கட்டும்! சுவாமி! இருக்கட்டும்! யானைக்கொருகாலம் வந்தால் பூனைக்கொருகாலம் வாராதா?

ராணு:—அதற்காக நீ கவலைப்பட வேண்டாம். நம் தலையைச்சிரைத்து தாடியைப்பிடித்து உலுக்கினுல் கூட நமக்கு ரோஷமிரா தென்றெண்ணிவிட்டாயா என்ன? இன்னும் சில விசேஷங்கள் நீயே சீக்கிரத்தில் கேள்விப்படுவாய். அப்புறம் எல்லாம் உனக்கே தெரியவரும். நாம் உன் தகப்பனரிடத்தில் எவ்வளவோ நேசமாயிருந்தோம். ஆத்மத்துரோகமும் செய்யமாட்டோம். ஆதலால் நம்மிடத்தில் அவ்வளவு அந்தரங்கமாயிருந்த உன் தகப்பனருக்கும் நமக்கும் தீங்கிழைத்தவனை—

(ஒரு சேவகன் வருகிருன்.)

ஏனடா? என்ன சமாசாரம்?

சேவகன்:—யுவராஜா அவர்களிடத்திலிருந்து கடிதங்கள் வந்திருக்கின்றன. (என்று இரண்டு கடிதங்களைக்கொடுக்கிருன்.)

ராணு:—யுவராஜாவா? ஹேமசந்திரனிடத்திலிருந்தா? யார் கொண்டுவந்தார்கள்? உன்னிடத்தில் யார் கொடுத்தார்கள்?

சேவகன்:—யாரோ பைராகிகளாம் நான் அவர்களைப்பார்க்கவில்லை. அவர்கள் இக்கடிதங்களை வாஸவதத்தனிடம் கொடுத்ததாக அவன் என்னிடம் கொடுத்து சமூகத்துக்குச் சேர்ப்பிக்கச்சொன்னுன்.

ராணு:—நல்லது நீபோ. (சேவகன் போய்விடுகிருன்.) லக்ஷ்மணஸிங் இதைப்படிக்கிறேன் கேள்:—

"மகாப்பிரபோ, தங்களுடைய ராஜ்யத்தின் எல்லைக்கே மறுபடியும் திரும்பி வந்துவிட்டேன். இப்பொழுது சுத்தகைவல்ய ஸ்திதியிலிருக்கிறேன். நாளையதினம் தங்களுடைய ராஜதரிசனம் கிடைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்பொழுது ஏகாந்தமாய்த் தங்களிடத்தில் அனுமதி பெற்றுக்கொண்டு, சொல்லவேண்டியதை சவிஸ்தாரமாகச்சொல்லுகிறேன். நான் திடீரென்று திரும்பி வரும்படி நேரிட்ட காரணமும் அப்பொழுது தெரியவரும். தங்கள் ஊழியன் ஹேமசந்திரன்"

இதென்ன கேலியா, நிஜமா? அல்லது யாராவது போக்கிரித்தனத்துக்காக எழுதியிருக்கிருர்களா? இவன் திரும்பிவந்தால் இவனுடன் கூடப்போனவர்கள் எங்கே?

லக்ஷ்மண:—கையெழுத்து யாருடையது என்று தெரிகிறதா?

ராணு:—இது நிச்சயமாய் ஹேமசந்திரன். கீழே என்னவோ "கைவல்ய ஸ்திதி என்றால் கையில் இல்லாத ஸ்திதி என்றர்த்தம்" என்று எழுதியிருக்கிறது. எனக்கு இப்பொழுது என்ன செய்கிறதென்று தெரியவில்லை. நீ ஏதாவது யுக்தி சொல்ல முடியுமா?

லக்ஷ்மண:—எனக்கும் பிரமையாகத்தானிருக்கிறது. ஆனல் அவன் திரும்பி வருவதும் ஒருவிதத்தில் சந்தோஷமாயிருக்கிறது. என்மனவியாகூலத்துக்கு ஒருவிதபரிஹார முண்டாகும். ஏனெனில் அவனை நேருக்கு நேரில் முகத்துக்கு முகம் கண்டு "நீ என் தகப்பனை இப்படிச் செய்தாயல்லவா?" என்று சொல்லிக்காட்ட எனக்கு சாவகாசம் நேரும்.

ராணு:—அப்படியானுல் நான் சொல்லுகிறதை—ஓகோ இன்னெரு கடித மிருக்கிறதே அதையும் பார்க்கவேண்டாமா? அதுயார் எழுதியிருக்கிருர்களோ என்னவோ தெரியவில்லை! அதையும் படிக்கிறேன் கேள்:—

"உதயபுரி ராணுவாகிய ராஜராஜேசுவராதிபதி கிலேசவர்மா அவர்கள் திவ்ய சமூகத்துக்கு தண்டகாரணியாதிபதியாகிய விஜய வைரமார்த்தாண்டப் பிரதாபன் என்னும் வனசரஸிம்ஹம் எழுதிக்கொண்ட வர்த்தமானம்:—தங்கள் பிதாவின் நாட்களில் நம பிதாவுக்குத்தங்கள் ராஜ்யத்தில் இருந்த ஆஸ்தியையும் அதிகாரத்தையும் பிடுங்கிக்கொண்டு அவரையும் அப்பொழுது சிறுவனுயிருந்த நம்மையும் வனவாஸம் செய்யும்படி அனுப்பிய போதிலும், இப்பொழுது நம் பிதாவும் இறந்து நாமும் பொறுமான வயதுவந்து விட்டபடியால், நம்முடைய பிதிரார்ஜிதமான சொத்தையும் அதிகாரத்தையும் நாம் இப்பொழுது நமக்குத்திருப்பிக் கொடுக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேம். இக்கடிதம் கண்ட இரண்டு வாரங்களுக்குள் பதில் கிடைக்கா விட்டால் நேரில் வந்து அவற்றைக் கைப்பற்றிக்கொள்ள ஸன்னத்தர்களாக வருவோம்.

வனசரஸிம்ஹம் என்று முத்திரை."

இதைப்பார்த்தாயா லக்ஷ்மணஸிங்; ஒருவனுக்கு விபத்துகள் வந்தால் எல்லாம் ஒருமிக்கத்தான் வரவேண்டுமோ? கண்மூடிக் கண்திறப்பதற்குள் நான் கனவிலும் நினையாத கவலைகளெல்லாம் உண்டாகிவிட்டதே! நம்பிதா செய்த குற்றத்துக்குக்கூட நாம் தானே பாத்தியம்? இவனுக்கு இப்பொழுது யா

ருடைய ஆஸ்தியைப் பிடுங்கிக் கொடுக்கிறது? இவன் எழுதுகிற மாதிரியைப்பார்த்தால் கொள்ளைக்காரப் பயல்போல் தோற்றுகிறது. இவனுக்கு எப்படி நம்முடைய ராஜ்யத்தில் இடங்கொடுக்கிறது? இவன் ஹேமசந்திரனுடைய தூண்டுதலின் பேரில் தான் இவ்வளவு தைரியமாய் எழுதுகிறானென்று தோன்றுகிறது. நல்லதிருக்கட்டும் வருகிறதெல்லாம் வரட்டும். விதியையும் மதியால் வெல்லலாம் என்று நம்முடைய சாமர்த்தியத்தையும் கொஞ்சம் காண்பிப்போம்! இப்பொழுதில்லாவிட்டால் எப்பொழுது தான் காண்பிக்கிறது? என்ன லக்ஷ்மணஸிங்! நானுன்னிடத்தில் ஒரு சமாசாரம் சொல்லவந்தேன். நீ அந்தப்படி கேட்டு நடக்கும் பக்ஷத்தில்—உன்னுடைய க்ஷேமத்தையும் லாபத்தையும் உத்தேசித்துச் சொல்லும் பொழுது நீ கேட்க மாட்டேனென்று சொல்ல நியாமில்லை—என்ன நான் மேலே சொல்லட்டுமா?

லக்ஷ்மண:—தாங்கள் என்னை ஹேமசந்திரனிடம் முற்றிலும் சமாதான மாகிவிடும்படி உபதேசிக்காதிருந்தால் வேறு என்ன வேண்டுமானாலும் செய்யக்காத்திருக்கிறேன்.

ராண:—உன் மனதுக்கு சமாதானமும் அவனுக்கு மரணமுமே தான் நாம் தேடுகிறது. அவன் இப்பொழுது திரும்பி வந்திருக்கிறது உண்மையானால் இப்பொழுது நாம் செய்யப்போகிற யுக்தியில் அவன் தப்பாமல் அகப்பட்டுக் கொள்ளும்படி செய்கிறேன். அவனறியாதபடி அவனையும் இந்த தந்திரத்தில் இழுத்து விடுகிறேன். அவன் தாய்க்குக்கூட அவன் இறந்தது தற்செயலாகவே யொழிய ஒருவர்பேரிலும் தோஷமில்லை என்று தோன்றும்படி செய்கிறேன்.

லக்ஷ்மண:—இவ்வளவு தூரம் யோசனை சொல்லுகிற தாங்கள் என்கையால் அவன் தண்டனையடையும்படி ஏற்பாடு செய்தீர்களானால் உத்தமமாயிருக்கும்.

ராண:—அது தான் நாமிப்பொழுது சொல்ல வந்தது. நீ டில்லிக்குப் போயிருந்தபொழுது உன்னைப்பற்றி இங்கே ஒருதரம் பிரஸ்தாப முண்டாயிற்று. அப்பொழுது ஹேமசந்திரனும் கூட இருந்தான். உன்னையறிந்த சிலர் உன்னுடைய ஸாமர்த்தியங்களைப்பற்றிக் கொஞ்சம் புகழ்ந்து கொண்டார்கள். அவர்கள் சொன்ன ஒரு அற்ப விஷயத்தில் அவனுக்கு உன்னிடம் பொறாமை யுண்டாகி விட்டதாகத் தெரியவந்தது.

லக்ஷ்மண:—அதென்ன விஷயம்?

ராண:—அற்ப விஷயம் என்றாலும் சிறுபிள்ளைகளுக்கு அவசியம் தெரிந்திருக்க வேண்டிய வித்தைகளிலொன்று தான் அதுவும். ஏனெனில் எந்தெந்த காலத்தில் எந்தெந்த வித்தைகளைக் கற்றுணர வேண்டுமோ அவை யொன்றையும் அப்பியசிக்காமல் விடக்கூடாது. பாலியத்தில் அப்பியஸித்த வித்தைகளின் பலன் சுடுகாடு மட்டும் வீண்போகாமலிருக்கும். பயில்வான்கள் எவ்வளவு கிழவனானாலும் நிமிர்ந்த நடையாய் நடக்கிறார்களல்லவா? இரண்டு மாஸத்துக்கு முன் இங்கே குதிரைவீரன் துலுக்கன் ஒருவன் டில்லியிலிருந்து வந்திருந்தான். நானும் துலுக்கர்களோடு யுத்தம் செய்திருக்கிறேன். அவர்கள் குதிரை மேலிருந்து செய்யும் ஸாஹஸங்களை எல்லாம் பார்த்திருக்கிறேன். இருந்தாலும் இவன் செய்த வித்தைகள் மந்திரத்தினாலென்றே நினைக்கும்படி யிருந்தது. ஜீனியுமில்லை கடிவாளமுமில்லை. காலும் குரலும் தான் குதிரையை நடத்தும் ஆயுதங்கள். ஏதோ குதிரை முதுகிலேயே பிறந்து வளர்ந்தவன்போல் அவ்வளவு சாமர்த்தியமாய் விளையாடினான்.

லக்ஷ்மண:—யாரவன், மாபூல்கானாகத்தானிருக்கவேண்டும்!

ராண:—ஆம், ஆம், அவன் தான். அதே பெயருள்ளவன் தான்.

லக்ஷ்மண:—அவனை எனக்கு நன்றாய்த்தெரியும். டில்லியில் அவன் பெயரைச்சொன்னால் அழுதபிள்ளை வாய் மூடும்.

ராண:—அவன் உன்னைப்பற்றிக்கொஞ்சம் சிலாகித்துச்சொன்னான். அதாவது "குருத்தோலை" என்னும் கத்தி விளையாட்டில் நீ மிகக் கைதேர்ந்தவனென்றும், அந்த ஆயுதத்துடன் நீ போர் புரிவாயானால் உன்னைத் தனிக்குத்தனியாய் எதிர்க்கத்துணிபவர்கள் டில்லியிலே இல்லை என்றும் சொன்னான். அதைக்கேட்டவுடன் ஹேமசந்திரன் நீ தத்க்ஷணமே இங்கேவந்து குதிக்கும் பக்ஷத்தில் தான் உன்னோடு எதிர்த்து நிற்கத்தயாராயிருப்பதாகச் சொன்னான். நாளைக்குக் கடிதம்போட்டு உன்னை வரவழைக்கிறோமென்றதற்கு அதெல்லாம் கூடாது நீ அப்பொழுதே வந்து குதிக்க வேண்டுமென்று சிரித்தான். இதிலிருந்து நான் ஒரு யுக்தி:—

லக்ஷ்மண:—அதென்ன யுக்தி, சுவாமி?

ராண:—லக்ஷ்மண, உன் தகப்பனாரிடத்தில் உனக்கு இருந்த பிரியம் உண்மைதானா, அல்லது இவ்வளவு துக்கப்படுதலும் வெளிவேஷம் தானா?

லக்ஷ்மண:—அதென்ன அப்படி கேட்கிறீர்களே?

ராண:—ஏனெனில் பிரியம் என்பது எப்போதும் ஒரே நிலையாயிராது. காலவித்தியாசத்துக்கும் புத்திவித்தியாசத்துக்கும் தக்கபடி பிரியமும் மாறிக்கொண்டுவரும். சரீரம் உண்டாகும் பொழுதே வியாதியும் கூடவே உண்டாவதுபோலும், ஜ்வாலை உண்டாகும் பொழுதே அதன் மத்தியிலேயே புகையும் உண்டாகி சமயம் பார்த்து அதை அவிக்கத்தயாராயிருப்பதும்போலும், பிரியத்துக்கும் அதற்கு எதிரிகளான தடைகளும் ஹானிகளும் அதனிடத்திலேயே இருக்கின்றன. ஆதலால் நாம் ஒரு காரியத்தை பிரியத்துடன் செய்வதாக உத்தேசித்தால் அதை

உடனே செய்துமுடிக்க வேண்டும். இல்லாவிட்டால் அடுத்த நிமிஷத்தில் நம் மனமெப்படியிருக்குமோ, நமக்கு நேரும் சந்தர்ப்பங்களெப்படியிருக்குமோ, பக்கத்திலிருப்பவர்கள் என்ன புத்தி சொல்லுவார்களோ! அதனால் தானே கர்ணன் கூட தான் தைலம் தேய்த்துக்கொண்டிருக்கும்பொழுது, தன் இடது கைப்புறமாயிருந்த தங்கக்கிண்ணத்தை தானம் கேட்டவனுக்கு அப்படியே இடது கையாலேயே எடுத்துக் கொடுத்துவிட்டான். ஏனெனில் இடது கையிலிருந்து வலது கைக்கு வாங்குவதற்குள்ளாக புத்தி எப்படி மாறுமோ? இன்னும் சிலர் நாளைக்கு செய்வோம் நாளைக்கு செய்வோம் என்று சொல்லிக்கொண்டே தங்களைத்தாங்களே ஏமாற்றிக்கொண்டு காலம் கழித்து திடீரென்று ஒன்றும் செய்யாமல் கண்மூடிவிடுகிறார்கள். நல்லது நீ இப்பொழுது உன் தகப்பனாருக்கு புத்திரன் என்பதை பேச்சில் மட்டுமல்லாமல் செய்கைகளில் எப்படி காண்பிக்கிறதாக உத்தேசித்திருக்கிறாய்?

லக்ஷ்மண:—நான் ஹேமசந்திரனைகோவில் மூலவிக்கிரகத்திற்கெதிரில் வேண்டுமானாலும் கொல்லத்தயாராயிருக்கிறேன்.

ராணா:—கொலைகாரனுக்கு கோவிலுக்குள்ளே கூட அபயம் கொடுக்கக்கூடாது தான். நியாயமான பழி வாங்குவதற்கு இடம் காலம் பார்க்க வேண்டியதில்லை. ததேவலக்னம் என்று அகப்பட்ட இடத்தில் பழி தீர்க்கவேண்டியது தான். இருந்தாலும் நாம் சொல்வதைக்கேட்டால் நீ அப்படி யொன்றும் செய்யவேண்டிய அவசியமில்லை. ஹேமசந்திரன் நாளை இங்கே அவசியம் வந்துவிடுவான். அவனெதிரில் முன்போலவே உன் கத்தி விளையாட்டைப் பற்றி அந்தத்துலுக்கன் சொன்னதைக்காட்டிலும் பதின் மடங்கு அதிகமாகப் புகழும்படி சில ஆசாமிகளைத்தூண்டிவிட்டு அவனுக்குப்பொறாமை யுண்டாகச்செய்வோம். அவன் அப்பொழுது உன்னோடு தான் ஒருநாளைக்கு விளையாட வேண்டுமென்று அவசியம் சொல்லுவான். அவன் வேடிக்கைக்காகச் சொன்னபோதிலும் நாம் அதை உண்மையாகவே எடுத்துக்கொண்டு ஒரு விளையாட்டுச் சண்டைக்கு ஏற்பாடுசெய்வோம். விளையாட்டுச் சண்டையாதலால் கூர் மழுங்கிய கத்திகளாலேயே சண்டைசெய்வதாகப் பாசாங்குசெய்து அவன் கையில் கூர் மழுங்கிய கத்தியைக் கொடுத்துவிட்டு நீயும் முதலில் அதே மாதிரி கத்தியையே எடுத்துக்கொள்வது போல் காண்பித்துவிட்டு, சற்றுப்பொறுத்து சண்டை ஆரம்பிக்கும் தருணத்தில் திருட்டுத்தனமாய் நல்ல கூரியகத்தி யொன்றை நீ மட்டும் மாற்றிக் கொள்ளலாம். அதைக்கொண்டு அப்புறம் நீ உன் வேலையைப் பார்த்துக்கொள்வாய்.

லக்ஷ்மண:—ஆம் அப்படியே செய்கிறேன். இந்த தந்திரத்தில் அவன் தப்பாமல்கப்படும் பொருட்டு நான் வஜ்ரநாபி மெழுகு ஒன்று வாங்கி வந்திருக்கிறேன். அதையும் கத்தி முனையில் கொஞ்சம் தடவி வைத்திருந்தால் அதைக்கொண்டு அவனைக்கொஞ்சம் கீறினாலும் போதும். அப்புறம் ஸஞ்சீவி மூலிகை கொண்டுவந்தாலும் அவனைப் பிழைப்பிக்க முடியாது.

ராணா:—இதை இன்னும் நன்றாய் யோஜித்து ஏற்பாடுகள் செய்வோம். காலம் கருவிகளெல்லாம் ஒத்துக்கொள்ள வேண்டும். கொஞ்சம் பிசகிப்போனாலாவது அல்லது நம்முடைய தந்திரத்தைக் காப்பாற்றி மறைக்க சாமர்த்தியமில்லாமல் நாம் அவனுக்கு சந்தேகத்துக்கு இடங்கொடுத்து விட்டாலாவது மோசம் வந்துவிடும். அப்படி அசட்டுத்தனம் போவதைவிட இக்காரியத்தை ஆரம்பிக்காமலே இருக்கலாம். ஆதலால் இது தவறிப்போனாலும் உடனே உபயோகிக்கும்படி இதற்கு உதவியாக வேறொரு தந்திரமும் ஏற்பாடுசெய்வோம். என்னசெய்யலாம்? இருவரும் பந்தயம் வைத்தே தான் விளையாட வேண்டும், அப்பொழுது தான் ரோஷம் கொடுக்கும். நல்லது இப்படி செய்யலாமென்று படுகிறது. என்னவெனில் நீ அவனை விளையாட்டத்தில் நன்றாய் ஆட்டி அலைக்கடிப்பாயானால் அப்பொழுது அவன் வியர்த்து தாகத்துக்கு ஏதாவது கேட்பான். அப்பொழுது தயாராக நான் மாதுளை ஷர்பத்செய்து வைக்கிறேன். அதில் சேர்க்கவேண்டிய சரக்கைச் சேர்த்துவைத்தால் அவன் உன் கை கத்திக்குத் தப்பினாலும் நம் கை ஷர்பத்துக்குத் தப்பாமல் பார்த்துக்கொள்வோம்.

(ராணி வருகிறாள்.)

என்ன சமாசாரம் ஜோதி? ஏன் பிரமித்து விழிக்கிறாய்?

ராணி:—ஒன்றன் பின்னொன்றாய் இந்த அனர்த்த பாம்பரைக்கு முடிவில்லையோ? அப்பா லக்ஷ்மணா, உன் தங்கை முழுகிப்போய்விட்டாள்?

லக்ஷ்மண:—ஐயையோ, முழுகிவிட்டாளா? எங்கே, எங்கே?

ராணி:—இந்த ஆற்றங்கரை யோரமாய் ஒரு பன்னீர் மரம் ஜலத்தின்மேல் கவிழ்ந்துகொண்டு படர்ந்திருக்கிறது. அம்மரத்தின் புஷ்பங்கள் கீழே ஓடும் ஜலத்தில் ஆகாசத்தில் நக்ஷத்திரங்கள்போல் பிரதிபிம்பிக்கும் அழகைப்பார்த்துத் தான் பலவர்ணபுஷ்பங்களால் தொடுத்துக் கொண்டிருந்த மாலையில் பன்னீர் புஷ்பமும் சேர்க்க வேண்டுமென்றோ என்னவோ, சாய்வாயிருந்த கிளையொன்றிலேறி, கிளை முறிந்தோ கால் தவறியோ ஜலத்தில் விழுந்து விட்டாள். சமீபத்தில் யாரும் ஒத்தாசைக்கில்லை. கொஞ்சநேரம் அவளுடைய புடவைகள் நன்றாய் நனைகிற வரையில் அவைகளோடு இவளும் மிதந்துகொண்டு ஸ்வப்பிரக்ஞை யின்றி மானஸஸரஸில் நீந்தும் ராஜஹம்ஸம்போல் பாடிக்கொண்டே போனாள். தற்செயலாய் அங்கே சற்று தூரத்தில் போய்க்கொண்டிருந்த ஹரிராஜஸிங் அந்தப் பாட்டைக்கேட்டு அதனால் இழுக்கப்பட்டவர்போல் அந்தப்பக்கமாய்

போனர். இவர் போவதற்குள் பாட்டும் நின்றுவிடவே, இவர் திகைத்து நிற்கையில் ஜலத்தில் ஏதோ புடவை மிதப்பதைக்கண்டு, அப்படியே ஜலத்தில் குதித்து அவளைத்தூக்கிக் கரையில் கொண்டுவந்து சேர்த்தார். ஆனால் உயிர்போய்விட்டது. இனி மனுஷியனால் செய்யக்கூடிய உதவி ஒன்றுமில்லை.

லக்ஷ்மண:—ஐயோ உத்பலா, நீயும் போய்விட்டாயா?

ராணி:—அடியோடு முழுகிப்போய் விட்டாள், இனி வரப்போகிறாளா?

லக்ஷ்மண:—ஐயோ என்னம்மா, உன் உடம்பெல்லாம் நீராயிருக்க உனக்காக நான் கண்ணீர் விடுதல் அனுவசியமே! நான் நம் தகப்பனார் இறந்ததற்கு அழவில்லை. உன்னை நினைத்தாலோ என்னை யறியாமல் வரும் அழுகையை அடக்க முடியவில்லை. என்ன தான் வெட்கப்பட்டபோதிலும் கொஞ்ச நேரமாவது பெண்பிள்ளை போலழுத பிறகு தான் என் ஆண்பிள்ளை சுபாவம் திரும்பிவரும். ஐயா எனக்கு உத்திரவு கொடுங்கள். இப்பொழுது என்னால் பேசமுடியவில்லை: என் பேச்சென்னும் கொடிய நெருப்பை இக்கண்ணீர்கள் அவித்து விட்டன.

(என்று வேகமாய்ப் போய்விடுகிறான்.)

ராணு:—நாமும் அவன் பின் செல்வோம் ஜோதி! நான் எவ்வளவோ சிரமப்பட்டு அவனை ஒரு வழியாய் சமாதானப்படுத்திக்கொண்டு வரப்பட்டபாடு பிரம்மப்பிரயத்னமாய்விட்டது. இப்பொழுது அடைத்த மடையை குச்சியால் கிறி விடுவதுபோல் இந்த துக்கம் அவன் கோபத்தை மறுபடி கிளப்பி விடும் என்று பயமாயிருக்கிறது ஆதலால் நாமும் போவோம்.

(எல்லோரும் போய்விடுகிறார்கள்.)

**நான்காம் அங்கம் முடிவு.**

---

## SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.
## சீதா அல்லது இல்லற வாழ்க்கை.

### 19-வது அதிகாரம்.

கிருஷ்ணசாமி அய்யருக்கு நேர்ந்த விபத்தைப் பற்றி உடனே ஸ்ரீநிவாச சாஸ்திரிகள் அவர் குமாரனுக்கு தந்தி கொடுத்தார். தந்தி சமாசாரத்தை கேட்டவுடனே அவர் பெண்சாதி வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு இந்த சண்டாளன் நாராயணசாஸ்திரி என் புருஷனை கெடுத்துவிட்டானே, அவனை தூக்கில் போடாமல் என் புருஷனையா தூக்கில் போடவேண்டும். வெள்ளைக்காரக்கட்டேலே போவான். அந்த ஜட்ஜிக்கு கண்ணு தெரியாமலாபோச்சு. தூண்டினவனை தூக்கில் போடாமல் அவர்களெல்லாம் தப்பித்துக் கொண்டார்களேயென்று அழுதாள். அவள் குமாரன் சங்கரன் எண்டி அவர்களை தூக்கில் போட்டால் உன் புருஷன் விடுபட்டு வந்ததுபோலாகுமா என்று சொல்லி அவளைத் தேற்றி உடனே எல்லோரும் திருச்சினப்பள்ளிக்கு புறப்பட்டார்கள். திருச்சினப்பல்லியில் போய் சங்கரனும் அவன் தாயாரும், கிருஷ்ணசாமி அய்யரை பார்க்க கவர்ன்மெண்டாரிடம் உததரவு கேட்டார்கள். 15-நிமிஷம்பேச உத்தரவு கொடுக்கப்பட்டது. இருவரும் அப்படி பார்த்ததைவிட பார்க்காமலே இருந்திருக்கலாம். இருந்திருந்தாப்போல் இறந்துபோன ஒரு பந்துவுக்கு அனேகர் எவ்வளவோ அழுகிறார்கள். அதிலும் இறக்கப்போகிறதாக முன்னமே தெரிந்துவிட்டால் அப்போது சொல்லவும் வேண்டுமோ. சுப்பு தன் புருஷனைப்பார்த்து அந்த 15-நிமிஷமும் புலம்பித்தீர்த்தாள். பிறகு சர்க்காரிடம் பிணத்தை தகனத்துக்கு தன்னிடம் கொடுக்கும்படி சங்கரன் மனு கொடுத்துக் கேட்டுக்கொண்டான். அந்தப்படியே உத்தரவு கொடுத்தார்கள். இவர்கள் வந்துசேர்ந்த மறுநாள் கிருஷ்ணசாமி அய்யன் தூக்குமரத்தில் போடப்பட்டான். போட்ட 5-நிமிஷத்துக்கெல்லாம், சுருக்கெடுத்து சங்கரனிடம் பிணத்தை ஒப்பு வித்தார்கள். சங்கரன் பிறகு கிருஷ்ணசாமி அய்யனுக்கு செய்யவேண்டியக்ரியைகளையெல்லாம் செய்து மயானத்தில்கொண்டுபோய் தீமூட்டி வைத்துவிட்டு வீட்டுக்குவந்து சேர்ந்தான். அந்த ஊரில் அன்றையதினம் 'ரொஸேரியோ' என்று மெடிகல் காலேஜில் படிக்கும் மாணக்கர் ஒருவர் வந்திருந்தார். அவருக்கு ஏதாவது சமீபத்திலிறந்த பிரேதத்தை பரீக்ஷைசெய்ய வேண்டுமென்று ஆசை. அதற்காக அவர் மயானத்துக்குப்போய் காவல் கார்க்கும் பறையனுக்கும் 10-ரூபாயை கொடுத்து ஓர் ப்ரேதம் கொடுக்கச்சொன்னார். அப்போது தான் கிருஷ்ணசாமி அய்யனுக்கு தீமூட்டிவிட்டு சங்கரய்யர் போனர். பறையன் அதை கலைத்துக் கிருஷ்ணசாமி அய்யன் ப்ரேதத்தை கொடுத்து விட்டான். ரோஸேரியோ எடுத்துக் கொண்டு பரீக்ஷைக்காக அதை தன் வீட்டிற்கு கொண்டுபோய்விட்டார். ஸ்ரீனிவாச சாஸ்திரிகள், தங்கம், தன் தாயார் எல்லோரையும் தருவித்து நாராயணசாஸ்திரிகளை (உத்திரவு கேட்டுக்கொண்டு) போய்பார்த்தார். நாராயணசாஸ்திரிகளுக்கு இருந்த வருத்தத்தில், ஜயிலிலிருந்து 2-வருஷம் முடிந்தும்

வருவோமாவென்று தோன்றிற்று. ஸ்ரீனிவாச சாஸ்திரிகள் அவருக்கு தைரியம் சொல்லி மனந்தளராமலிருக்கும்படி வேண்டிக்கொண்டார். ஆவிர்டபூதி வெங்கட்ராம சாஸ்திரிகளுக்கும் ஸ்ரீனிவாச சாஸ்திரிகள் தேறுதலெல்லாம் சொன்னார். பிறகு நாராயணசாஸ்திரிகள், வெங்கட்ராம சாஸ்திரிகள் இருவரையும் வேறு ஜில்லாவின் ஜெயிலுக்கு அனுப்பிவிட்டார்கள். இது நிற்க.

சற்று நாம் பந்தலூருக்குப்போய் வருவோம். பந்தலூரைவிட்டு வெகு நாளாகி விட்டபடியால் அதை சற்று கவனிப்போம். பங்களாவில்ஸ்ரீனிவாச சாஸ்திரிகள் கிழவியம்மாளைத் தூரத்தின தினத்திற்கு மறு தினத்தில் ஓர் கிழவனும், கிழவியம்மாளும் வந்திறங்கினார்கள். வேம்புவய்யர் ஸ்ரீனிவாச சாஸ்திரிகள் தான் வந்திருக்கிறாரோ வென்று வெகு வேகமாய் ஓடிப்போய் பார்த்தார். யாரோ ஒரு கிழவனும் கிழவியுமாயிருந்தார்கள். அந்தக் கிழவன் வேம்புவய்யரைக் கண்டவுடன் ஐயா, நீர் நல்லவர் போலிருக்கிறது. உங்கள் பங்களாவில்சற்று ஒரு நாள் தங்கலாமாவென்று கேட்டான். வேம்புவய்யன் அப்படியே செய்யுங்களென்று அவர்களையழைத்துக்கொண்டுபோய் பங்களாவில் ஓர் அறையிலிருக்கச்சொன்னார். அந்தக்கிழவன் தானிருந்த அறையைவிட்டு பங்களாவை சுற்றி சுற்றி பார்த்தான். இதையெல்லாம் கண்ட வேம்புவய்யன் பெண்சாதி 'அவன்யாரோ அவனைப்பார்த்தால் திருடன்போலிருக்கிறதே' யென்றாள். வேம்புவய்யன் அதைக்கண்டு பயந்து அந்தக்கிழவன் தன்னறைக்குப்போகும் வரையில் பார்த்திருந்து மெள்ளப் போய் அந்த அறையைப் பூட்டிவிட்டு உள்ளேபோய் படுத்துக்கொண்டுவிட்டான். கிழவன் ராத்திரி கதவைத்திறக்கப்பார்த்தும் முடியாதது கண்டு கிழவியைப்பார்த்து உன் காரியம் இன்றைக்கு ஆகாது என்றான். பிறகு இருவரும் தூங்கிப்போய்விட்டார்கள். மறுநாள் காலையில் எழுந்தவுடன் கிழவன் என்னய்யா நானென்ன திருடனா என்னைவிட்டு ஏனையா கதவைப்பூட்டினீர்களென்றான். வேம்புவய்யன் அப்படியல்ல நீங்கள் தெரியாதவர்கள் ராத்திரி வேளையில் வெளியேபோனால் அபாயமென்று பூட்டினேனென்று சொன்னார். கிழவன் என்னய்யா உங்கள் பங்களாவை எனக்கு காண்பிக்கக்கூடாதா என்றான். வேம்புவய்யன் அவனைக் கூட்டிப்போய் பங்களாமுழுவதும் காண்பித்தார். கிழவன் மறுபடி சாயந்திரம் வருவதாகசொல்லி போய்விட்டான். அன்றையதினமே ஸ்ரீனிவாச சாஸ்திரிகளிடமிருந்து ஓர் கடிதம் வந்தது. அதில் பங்களாவுக்கு ஓர் கிழவி வருவாளென்றும் வந்தால் அவளை மரியாதையாய் நடத்தி அவள் யாரென்று விஜாரிக்கவேண்டுமென்றும் எழுதியிருந்தது. அந்தக்கடிதத்திலிருந்த வர்ணிப்பைப்பார்த்ததும் நேற்று ராத்திரிவந்த கிழவிதானென்று வேம்புவய்யர் உடனே அறிந்துகொண்டார். அன்று சாயந்திரம் சொன்னபடி கிழவனும் கிழவியும் வந்தார்கள். அவர்கள் வந்ததும் வேம்புவய்யர் வெகு உபசாரம் அவர்களுக்குச்செய்து முன் வைத்த அறையிலேயே வைத்தார். அவர்கள் ராத்திரி அந்த இடத்தைவிட்டு வெளிப்புறப்படவில்லை. கிழவி அடிக்கடி தன் மனதிற்குள்ளாகவே ஓகோ கடிதத்தை யாராவது எடுத்திருப்பார்களோ ஒன்றும் தெரியவில்லையே, அகப்பட்டால் கடிதத்தை நான் இங்கே வைக்கக்கூடாது. கையில் கொண்டுபோய் விடவேண்டும். அய்யோ நாம் அதுவும் செய்யக்கூடாதே! நாம் என்ன செய்கிறதென்று யோஜித்துக்கொண்டே இருந்து பிறகு தூங்கினாள். கிழவன் நிர்விசாரமாய் தூங்க ஆரம்பித்தான். மறுநாள் வெடிந்தவுடன் கிழவன் பங்களாவை நன்றாய்ப் பார்க்கவேண்டு மென்றான். வேம்புவய்யர் கிழவனுக்கு பங்களாவை நன்றாய் காண்பிவித்தார். கிழவன் ஒவ்வொரு அறையிலும் ஒரு சாமான்விடாமல் போலீசார் சோதனைபோடுவதுபோல் சோதித்தான். வேம்புவய்யர் அந்தக்கிழவனுக்கு அவ்வளவு அதிகாரங்கொடுக்கமாட்டார். ஆகிலும் தன்யஜமானன் கடிதம் வந்தபடியால் ஒன்றும் சொல்லக்கூடவில்லை. இப்படி ஒவ்வொரு அறையையும் கிழவன் சோதித்துப் பார்த்து பிறகு சங்கீத அறைக்கு வந்தான். அங்கே ஓர் ஹார்மோனியம் வைத்திருந்தது. கிழவன் அதைத்திறந்து காட்டச்சொன்னான். வேம்புவய்யர் அதைக்காட்டினவுடன் கிழவனுக்கு ஹார்மோனியம் வாசிப்பதில் வெகு பிரியமாதலால், அங்கேயிருந்த குறிச்சியை இழுத்துப் போட்டுக்கொண்டு கிழவன் வாத்யம் வாசிக்க ஆரம்பித்தான். வேம்புவய்யர் உடனே கோபங்கொண்டு ஓய்கிழவனாரே! இது என் யஜமானன் வாத்யம் நீர் இதெல்லாம் தொடக்கூடாது. அவர் உட்காருகிற குறிச்சியில் நீர் உட்காரலாமா? என்று கண்டித்தார். கிழவன் இப்படி தாமதம் வேண்டுமென்றே செய்தான். ஏனென்றால் கூடவந்த கிழவிக்கு பாசியறையை தனியாய்போய் சோதிக்க சாவகாசம் வேண்டும். ஆகையால் கிழவன் வேம்புவய்யரிடம் சாவகாசப்படுத்திக்கொண்டு ஹார்மோனியத்தை விடாமல் வாசித்துக்கொண்டிருந்தான்.

இதற்குள் கூடவந்த கிழவியம்மாள் மெள்ள பழய வீட்டைநோக்கி முன் எடுத்த கொத்துதிறவுகோலை ஒருவருமறியாமல் எடுத்துக்கொண்டு போனாள். மேற்கு வீட்டில் முன்புறம் கொஞ்சம் ரிபேராயிருந்தது. கிழவியம்மாள் அனேகம் கதவுகளை திறந்துகொண்டு போனாள். பாசியறையின் பக்கத்துக்கதவுகளைத் திறந்தவுடன். அதன் புழுதியெல்லாம் இவள் மீது அடித்தது, இவளுக்குப்பின்னால் யாரோ போவதுபோல் சாசரவென்று சப்தம்கேட்டது. திரும்பிப்பார்த்தால் ஒன்றையும் காணோம். மறுபடி பாசியறை கதவைத்திறக்க திறவுகோலை கதவில்போட்டாள். அதற்குள் அந்த உள்ளிலிருந்து சலசலவென்று ஏதோவந்து கதவிலடித்தது. கிழவியம்மாள், ஜானகி இருக்கிறாயா, நான் உனக்கு ஒரு குற்றமும்செய்யவில்லையே, ஏன் என்னை பயமுறுத்துகிறாயென்று மறுபடியும் கதவை திறக்கப்பார்த்தாள், மறுபடியும் சலசலவென்று சப்தம் உள்ளே

கேட்டது. பின்புறம் யாரோ வருவதுபோல் சரசா வென்று ஓசைகேட்டது. கிழவியம்மாள் நடுங்கிப் போய்விட்டாள். ஜானகியம்மாளுடைய ப்ரேதத்துக்கு ஓர் இரையானேனென்று நினைத்துக்கொண்டாள். உடனே இவளுக்கு கிறுகிறென்று வந்தது. ஒன்றும் தோன்றவில்லை. அப்படியே திறவுகோலை எடுத்துக்கொண்டு திரும்பிப்பாராமல் ஒரே ஓட்டமாய் வெளியே ஓடினாள். வெளியேவந்ததும் அய்யோ என்று கத்திக்கொண்டு கீழே விழுந்துவிட்டாள். எதார்த்தத்தில் அந்த உள்ளில் ஒன்றுமில்லை. ஓர் பெரிய கடிதம் உள்ளேவிழுந்துகிடந்தது. அது காற்றில் அசைபட்டு அங்குமிங்கும் ஓடியது. கிழவியம்மாளுடைய மனதில் அந்த உள்ளில் ஓர் ப்ரேதம் சஞ்சாரம் செய்துகொண்டிருந்ததாக எண்ணமிருந்தபடியால் இவளுக்கு அந்தக்கடிதத்தின் ஓசைகூட பயத்தைக்கொடுத்தது.

ஒருவன் ஒரு அமாவாசை இருட்டில் ஓர் சந்தில் போனான். அங்கே போகும்போது காலில் வழவழவென்று ஏதோ ஒன்று அகப்பட்டது. அய்யோ பாம்பே என்று அலறி ஓர் தாண்டு தாண்டிக் குதித்தான். இவன் குதித்ததும் ஏதோ ஒன்று இவன் காலைக் கவ்வியது. இவன் சரேலென்று காலை உதறிவிட்டு வீட்டுக்கு ஓடிவந்து நான் இனி பிழைக்கமாட்டேன். என்னை பாம்புகடித்துவிட்டது என்றான். சற்று நேரத்திற்கெல்லாம் மயக்கம்வந்துவிட்டது. ஒருவன் இதையெல்லாம் கண்டு இதன் உண்மையை அறியும்பொருட்டு ஓர் விளக்கு எடுத்துக்கொண்டுபோய் பார்த்தான். அங்கே ஓர் பெரிய பழுதையும் ஓர் பிளக்கப்பட்ட மாங்கொட்டையும் கிடந்தது. உடனே அவன்போய் எல்லா ஜனங்களையும் பயமுறுத்தி அய்யோ அத்தனை பெரிய பாம்புகடித்து இவன் எப்படி பிழைப்பான் வந்துபாருங்களென்றுசொல்ல எல்லோரும் பயந்து நான் மாட்டேன் நான் மாட்டேனென்றார்கள். கடைசியில் அவர்களையெல்லாம் தைரியப்படுத்தி அந்த மனிதன் கூப்பிட்டு காண்பிக்கவும் எல்லோரும் பழுதையும் மாங்கொட்டையும் எனக்கண்டு சிரித்தார்கள். பிறகு அந்த மனிதனுக்கு மயக்கத்தை தெளியவைத்து மாங்கொட்டையையும் பழுதையையும் காண்பிக்கவும் அவன் பிழைத்தான். இப்படி நமது பயத்திற்கெல்லாம் நமது மனதுதான் காரணமாயிருக்கிறது.

கிழவியம்மாள் மேலே சொன்னபடி கத்தி கீழே விழுந்தும் அந்த சப்தம்கேட்டு வேம்புவய்யரும் கிழவனும் ஓடிவந்தார்கள். வந்ததும் பார்க்க கிழவியம்மாள் மூர்ச்சைபோய் கீழே கிடந்தாள். திறவுகோல் கொத்து கையிலிருந்தது. வேம்புவய்யர் கிழவனைப் பார்த்து ஓய் இது என்ன அக்ரமம் எங்கள் வீட்டுத் திறவுகோலைத்திருடி எதையோ இந்த அம்மாள் கொண்டுபோகப் பார்த்திருக்கிறாளென்றான். கிழவன் ஒன்றும்பேசாமல் கிழவியை தன் மடியில் போட்டுக்கொண்டு அவளுக்கு மூர்ச்சைதெளிய கொஞ்சம் தண்ணீர் முதலானதுகள் கொண்டுவரச் சொன்னான். தண்ணீர் கொண்டுவந்து அவளுக்கு வேண்டிய உபசாரங்கள் செய்யவும் அவள் எழுந்திருந்து உட்கார்ந்து கிழவனைப்பார்த்து மாமா இனி இந்த இடத்தில் ஒரு நிமிஷம்கூட இருக்கக்கூடாது என்றாள். இதற்குள் வேம்புவய்யர் இவர்கள்நடத்தையையெல்லாம்பார்த்துவிட்டு அவர்களை போலீசார்வசம் ஒப்புவிக்கலாமாவென்று பார்த்தார். பிறகு ஸ்ரீனிவாச சாஸ்திரிகள் கடிதம் ஞாபகத்துக்கு வந்து ஓகோ அப்படிசெய்தால் அது அவர் மனதுக்கு விரோதமாயிருக்குமேயென்று எண்ணினார். கடைசியில் அவர்கள் பெயர் ஊரையாவது விஜாரிக்கலாமென்று எண்ணி கிழவனைக் கூப்பிட்டு எல்லாம் கேட்டார். கிழவன் அய்யா எனக்கும் மருமகளுக்கும் ஊரென்பதே கிடையாது. எங்களுக்குப்பெயரும் கிடையாது. அவள் என் தமக்கையின் ஒரே மகள் என் தமக்கையும் போய்விட்டாள் அவளுக்கு இந்த மஹானைத்தவிற வேறு ஒருவருமில்லை. இவளுக்கர்வது ஒரு குழந்தை பிறக்குமென்றருந்தேன். அதுவுமில்லாமற்போய்விட்டது. ஒரு பெண்குழந்தை முகத்தைக் காட்டிவிட்டு உடனே இறந்துபோய்விட்டது. சில காலத்துக்கெல்லாம் அவள் புருஷனும் இறந்துபோய்விட்டான். அய்யா என் மருமகளுக்கு என்னைவிட்டு வேறு உறவினரும் இல்லை. எனக்கும் அவளைவிட்டு வேறு ஒருவருமில்லையென்று சொல்லி கண்ணீர்விட்டு அழுதான். வேம்புவய்யன் மனது ரொம்ப இரக்கமுள்ளதானபடியால் அவர்களுக்காக இரக்கப்பட்டு, அவர்களை வெளியே அனுப்பினான்.

வேம்புவய்யருக்கு அவர்கள் ஏன் அங்கு வந்தார்கள் அந்த அறையில் என்ன விசேஷம் இது ஒன்றும் ஊகிக்கமுடியவில்லை. கிழவனும் அதை சொல்லாமலே ஏமாற்றிவிட்டான். பிறகு நமது யஜமானனுக்கு இதையெல்லாமம் தெரிவிக்க வேண்டுமென்று சுருக்கமாக கிழவன் கிழவி இவர்கள் வந்ததையும் போனதையும் எழுதிமற்றதெல்லாம் நேரில் கேட்டால் தான் தெரியவருமென்று எழுதினார். கிழவனும் கிழவியும் அன்றையதினம் வெகுதூரம் போய் ஓர் ஊரில் இறங்கி அன்று ராத்திரி அங்கே ஓர் சத்திரத்தில் தங்கினார்கள். கிழவியம்மாள் தன் மாமனைப்பார்த்து மாமா நாம் வெகுநாள் பிரிந்திருந்து இப்போது தான் சேர்ந்தோம். எனக்கு மறுபடியும் பிரியும்படியான ஹேது வந்துவிட்டது. நான் எங்கே போகிறேனென்று நீ கேழ்க்கக்கூடாது. ஆனால் என் க்ஷேமம் உனக்குத்தெரியும்பொருட்டு 3-வாரத்திற்கொருதரம் உனக்கு கடிதம் எழுதுவேன். கடிதம் ஒரு வாரத்துக்கு சேர்ந்தாப்போல் வராவிட்டால் அப்போது நான் அபாயஸ்திதியிலிருக்கிறேனென்று நினைத்துக்கொள்ளலாம். அப்போது கடைசி கடிதத்தின் போஸ்டாபீசை விஜாரித்துக்கொண்டு நீ வந்தால் போஸ்ட்மாஸ்டர் சொல்லுவார். இவ்வளவு தான் நானுனக்

சொல்லக்கூடியதென்று சொன்னாள். மறுநாள் காலமே விடிந்து கிழவன் விழித்துக கொள்வதற்குள் கிழவியம்மாள் புறப்பட்டுப் போய்விட்டாள். கிழவன் பிறகு அவளை எங்கே தேடிப்பார்த்தும் அகப்படவில்லை. கிழவன் மிகவும் வருத்தப்பட்டுக் கொண்டு ஊர்போய்ச சேர்ந்தான். ஊருக்குப் போனவுடனே அங்கே இவனுக்கு ஓர் கடிதம் கிழவியிடமிருந்து வந்து காத்திருந்தது. அதில் தான் சௌக்யமாயிருப்பதாக கண்டிருந்தது. இப்படியே கடிதம் 2-மாசத்துக்கு வந்துகொண்டிருந்தது. பிறகு 3-வாரத்திற்கு வரவில்லை. கிழவன் உடனே போஸ்டாபீசை விஜாரித்துக்கொண்டு போஸ்ட் மாஸ்டரை போய்க்கண்டான். இவர் மூலமாய் கிழவியின் ஜாகாவைத் தெரிந்துகொண்டுபோய்ப் பார்க்க அவள் படுத்த படுக்கையாய் வியாதியால் அவஸ்தைப் பட்டுக்கொண்டிருந்தாள். கிழவனைக்கண்டதும் அவள் மாமா என்னையாராவது தேடிக்கொண்டு வந்தார்களா. அந்தஉள்ளை எதாவது திறந்துவிட்டார்களா. இல்லையென்றுசொல் மாமா நான் பிழைத்துக்கொள்வேனென்றாள். கிழவனுக்கு அந்த சங்கதிதெரியாது. ஆகிலும் அவளை தைரியப்படுத்தும் பொருட்டு அம்மா அவர்கள் ஒருவரும் உன்னைத்தேடவில்லை. அந்த உள்ளையும் ஒருவரும் லக்ஷியம் செய்யவில்லை, அதன் பக்கத்தில்கூட ஒருவரும் போகிறதில்லை யென்றான் பிறகு கிழவியம்மா அவர்கள் அந்த உள்ளை திறக்கிறதில்லையென்று சத்யம் செய்துகொடுக்கமாட்டார்களா அப்படி சத்யம் செய்தார்களானால் நான் பிழைத்துக்கொள்வேன் மாமா என்றாள். கிழவனுக்கு இருந்த பிரியமானது ஸ்ரீனிவாச சாஸ்திரிகள் காலில்விழுந்தாவது அப்படி சத்யம் வாங்கிக்கொள்ளலாமென்று அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டு கிழவிக்கு தைரியம் சொல்லிவிட்டுப்போனான். கிழவியும் இந்த ஆசையால் கொஞ்சம் தெளிந்திருந்தாள். இது நிற்க.

டாக்டர் ரொசேரியோ பிணத்தைக் கொண்டு போனாரே அவர் அதை என்னசெய்தாரென்று பார்ப்போம். வீட்டிற்குப் போனவுடன் அவர் அப்பிணத்திற்கு சுத்தம் செய்வதற்கென்று சில மருந்துகளைக் கொடுத்தார். அப்போது அப்பிணத்துக்கு கொஞ்சம் சுவாஸமிருக்கிறதாக அவருக்குத்தோன்றிற்று. உடனே சுவாஸம் வருவதற்கு வேண்டிய மருந்தகளைக் கொடுத்தார். கை நாடியைப்பார்த்தார். உயிர்போகவில்லையென்றும் மூர்ச்சையாய் கிடந்திருக்கிறாரென்றும் தெரிந்தது. டாக்டர் உடனே பயந்து அய்யோ இவன் தூக்கில் போடப்பட்டவனுச்சே நாமென்னசெய்கிறதென்று அவனை அப்படியே அன்று ராத்திரி வெளியே கொண்டுபோய் ஓர் மறைவான இடத்தில் போட்டுவிட்டு ஒருவருக்குந் தெரியாமல் வீடுவந்து சேர்ந்தார்.

(இன்னும் வரும்.)

## CURRENT TOPIS AND NOTES.
## காலவிசேஷங்களும் குறிப்புகளும்.

**காலக்கேடு.** இப்பொழுது காலம் கெட்டுக்கிடக்கிறது. குடிகளுக்கும் கவர்ன்மெண்டுக்கும் மனப்பொருத்தம் இல்லாததுபோல் காட்டுகின்றது. ஜனங்களுக்கு கவர்ன்மெண்டாரிடத்தில் ஒருவித அவநம்பிக்கையும் கவர்ன்மெண்டுத்யோகஸ்தர்கள் செய்யும் செய்கைகளில் ஒருவிதச் சமுசயமும் உண்டாயிருக்கிறதாசத் தோற்றுகிறது. அப்படியே கவர்ன்மெண்டார் ஜனங்களிடத்து அவநம்பிக்கையும் சமுசயமும் கொண்டவர்களாகக்காட்டி வருகிறார்கள். ஜனஸ்வாதந்திரியம் பாராட்டிப் பேசுமெதையும் கவர்ன்மெண்டதிகாரிகள் சர்க்காருக்கு விரோதம் செய்வதாக பாவிக்கிறார்கள். சர்க்காருத்தியோஸ்தீர்கள் தாங்களே சர்க்கார் என்று நினைக்கிறதாகக்காட்டி வருகிறார்கள். ஜனங்களில் அரசியல் தர்மமறிந்த சில பிரமுகர்கள் "உத்தியோகஸ்தர்கள் உத்தியோகஸ்தர்களேயன்றி ஒருக்காலும் சர்க்காராகமாட்டார்க" ளென்று சாதித்து, அரசியல் தர்மம் எதுவோ அதையனுசரித்து நடப்பவரே அரசுக்குப் பிரதிநிதி யாவார் என்று துணிந்து, அவர்கள் அரசியல் தர்மமென்று ஹிருதயபூர்வகமாக நம்பியிருப்பதற்கு விரோதமாக அதிகார வரம்பு கடந்து நடக்கு முத்யோகஸ்தர்களை, அவர்கள் கவர்னர், கவர்னர்-ஜெனரலாயிருந்தாலும் சரி, இந்தியா மந்திரியேயாக விருந்தாலும் சரி,— அலக்ஷியம்செய்து, ஒவ்வோர் சமயத்தில் அவமதித்தும் எழுதுகிறார்கள். இப்படி பஹிரங்கமாய், ஜனங்களுக்கு உத்யோகஸ்தர்களிடத்திலிருக்கும் ஒருவிதக்கண்மூடி மதிப்புக் குன்றும்படிப் பேசியும் எழுதியும் வருகிறவர்களைத்தராதரம் பார்க்காமல், கவர்ன்மெண்டார் தங்களுக்குள்ள அதிகாரத்தைக்கொண்டு அடக்கி மடக்கப்பார்க்கிறார்கள். அதுவும் பலியாவிட்டால். எதோ நேர்ந்த சட்ட நிபந்தனைகளைக்கொண்டு, அவர்கள் சட்டத்தை மீறி நடந்ததாகக்குற்றம் சாட்டி மாஜிஸ்திரேட்டு முன்னிலையில் கொண்டுபோய் விசாரணைசெய்து ஒரு வருஷம் இரண்டு வருஷமென்று வருஷக்கணக்காய் மண் சுமக்கும்படி கஷ்ணதண்டனை விதித்துவிடுகிறார்கள். வடக்கே எங்குபார்த்தாலும் இப்படி நடக்

கும் நடபடிக்கைகளால் அல்லோலகல்லோலம் போலி ட்டுக்கிடக்கிறது.

**"தன்னுயிரை மன்னுயிர்போல் நினை."**

"தன்னுயிரை மன்னுயிர்போல் நினைக்கவேண்டு" மென்பதே எல்லா மதத்துக்கும் பொதுவானதோர் முக்கியதர்மம். ஸநாதன தருமத்தில் இதை ஜீவகாருண்யமென்று சொல்வார்கள். 'மன்னுயிர்' என்றதை எல்லா உயிர்களுக்கும் பொருந்தச் சொல்வது ஸநாதன தர்மமாம். அரசன் மன்னுயிரைத்தன்னுயிர்போல் பார்க்கவேண்டு மென்பது என்றென்றைக்கும் எல்லாருக்கும் பொதுவான அரசியல் தர்மம். இங்கே 'மன்னுயிர் காத்தல்' மனிதர்கள் உயிர்களை வாங்காமலிருப்பதற்கு மட்டுமல்ல, ஆனால் அவர்கள் உஜ்ஜீவித்திருந்து உயிர்பெற்றதின்பயனை யடையும்பொருட்டு அவர்களுக்கு வேண்டிய சாதனசாதகங்களை அவர்கள் தேடிக்கொண்டு ஜன்ம சாபல்யம் பெற அவர்கள் உழைப்பதற்கு இடையூறுகளில்லாமற் பாதுகாப்பதே 'மன்னுயிரைக்காத்தலாகும்.' இக்கருத்து விளங்கவேண்டுமென்றே அரசன் மன்னுயிரைத் தன்னுயிர்போல் காக்க வேண்டுமென்று சொன்னது. மனிதர்களிலெல்லாம் சிரேஷ்டமானவன் அரசனாதலால், விசுவரூபதரிசனமளித்த பகவான் மனிதர்களில் தான் அரசனாகவிருப்பதாகச் சொல்லியிருக்கிறார். உண்டுடுத்துறங்கிக்களித்துக்காமத்தில் மூழ்கினவனாய் ஸ்வகாரியத்தில் கண் பஞ்சடைந்திருக்கிறவன் பூர்வ ஜன்ம புண்யவசத்தால் அரசர் குலத்தில் பிறந்து சிம்மாஸனாதிபதியாகவேயிருந்தாலுங்கூட அவன் ஒருக்காலும் ஜனங்களில் சிரேஷ்டனாகமாட்டான்; ஆகாத காரணத்தால், பகவான் வாக்குப்படி அரசனாகமாட்டான். அரசவம்சத்திற் பிறந்து அரசனது ஆசனத்திலிருந்து, அரசர்களுக்குரிய வெளியங்கங்களெல்லாம் பொருந்தினவனானாலும் அவன் அக்காரணத்தினால் புருஷோத்தமன் வசிப்பதற்கு பாத்திரனாகாதபடி ஸ்வகாரிய சித்தனாகவிருக்கும் காரணத்தால் அவனை முக்காலமுமறிந்த மூதறிஞர்கள் மனிதிரிற்பதராய் நினைப்பார்கள். வஸ்துக்களில் ஸத்குணத்தால் மிகச்சிரேஷ்டமானதும், அற்பத்தன்மையால் மிகலேசானதும் தன்னியல்பால் மேலுக்குவந்து விளங்குவது சகஜம். எப்படியென்றால் அன்னமயமான வஸ்துக்களில் சிரோரத்னமான நாகமணியும், சிந்தாமணியும் எப்படி சிரேயஸ் பெற்ற சிரோ பூஷணமாக விளங்குகிறதோ, அப்படிப்போல காற்றில் தூற்றும் நெல்லில் பதரானவை மேல்நோக்கிப்பறக்கின்றன. இரண்டும் மேலுக்கு வந்துவிளங்கினாலும் ஒன்று சாசுவதமாக மேலேயே யிருக்சத்தக்கதாக, மற்றொன்று மேலேதூக்கிக்காட்டி யுடனே அற்பமென்று கண்டு விலக்கப்படுவதற்கேயாக விளங்குகிறது. அப்படிப்போல, புருஷோத்தம சிந்தையின்றி மனிதர்களுக்கெல்லாம் மேலேயிருப்பவர்கள் அரசர்களாயினும் அவர்கள் மானிடப்பதர்களே யாவார்கள். ஆனாலும் பதர்கள் நெல்லோடு கூடியிருக்கிறவரையில் நெல்லுக்குள்ள மதிப்பும் பாதுகாப்பும் அதற்குமுண்டாயிருப்பதுபோல, பூர்வபுண்ய சேஷமுள்ளவரையில், அரசஸ்தானத்திலிருக்கும் பதர்களுக்கும் அந்தப்பதவிக்குள்ள அந்தஸ்தும் மரியாதைகளுமுண்டு. இந்த வுண்மையையறியாது அவர்களைப்பாமரர்கள், மரியாதை தப்பிப்பேசினால் கட்டாயம் தண்டிக்கப்படலாவார்கள். கண்டனை தண்டனைக்கு பயந்தவர்கள் யாவரும் அவர்களை அவமரியாதையாகப் பேசப்பாத்திரர்களாகார்கள். கண்டனை தண்டனைக்கஞ்சாதவர்களான திரிகாலஞானிகளோவென்னில், கருணையே வடிவாயுள்ளவர்களாதலாலும், அந்தக்கருணாகரரூபத்துக்கு மரியாதையே பூஷணமாதலாலும் அவர்கள் ஒரு பொழுதும் மரியாதைப் பிசகாக நடந்துக்கொள்ளமாட்டார்கள். மரியாதையின் ஸ்வரூபமே அவர்களாயிருப்பதால், மரியாதைப்பிசகு அவர்களிடத்திற் காணபது கூடாமை. அப்படி பார்ப்போர்க்கு மரியாதைப்பிசகாக நடந்துகொள்வதாகப் பட்டால் அது காருண்ய மிகுதியால் கெட்டவழியில் போகிறவர்களைத் திருப்பி நல்வழிக்குக்கொண்டுவர வேண்டுமென்கிற மேலான பரோபகார சிந்தையாலுண்டானதாயிருக்குமன்றி வேறு எவ்விதமான அந்தக்கரண தோஷமும் அவர்களிடத்திலிராது. ஸநாதன தர்மத்தின் நடபடிக்கையொழுங்கை விளக்குவதான நமது இதிஹாஸபுராணங்களிலும் கிறிஸ்து வேதமான பழைய பைபிளிலும் இதற்குதாரணங்கள் எத்தனையோ இருப்பதைப்பாக்கக்காணலாம் காலம்கெட்டால் தர்மம் தலைகவிழ்ந்துபோக அதர்மம் தலையெடுக்கும். அதர்மம் தலையெடுத்தால் அப்பொழுது தர்மரக்ஷண்யார்த்தம் பகவான் அவதரிக்கலாகிறாரென்பது நிச்சயம். ஆனால் அவர் பொறுமையே ஸ்வரூபமாயுடையவராதலால், அதர்மம் சகிக்கமுடியாமற் போகிறவரையில், தர்மம் தானே தலையெடுக்காதாவென்று பார்த்திருப்பார்.

**"தர்மம்தலையெடுக்கும்."**

"தர்மம் தானே தலையெடுக்காதா?" என்று சொன்னதினர்த்த மென்னவென்றால், தர்மத்தை யனுஷ்டிப்பவர்கள் முயற்சியால், தர்மபரிபாலனம் செம்மையுறலாமென்பதே. தர்மத்தை யனுஷ்டிப்பவர்களையன்றி தர்மம் வேறில்லை. அது எப்படியென்றால் சூரிய கிரணங்களாய ஒளியையன்றி சூரியன் வேறல்ல. சூரியன் சூரியகிரணங்களின் சமஷ்டி ரூபமேயன்றி அவற்றிற்கு வேறான ஒரு வஸ்துவில்லை. அப்படிப்போலவே தர்மமும் தர்மிஷ்டர்களுக்கு வேறானதல்ல. தர்மிஷ்டர்எல்லாருடையவும சமஷ்டி ரூபமே தர்மதேவதை. இந்த தர்மதேவதையின் ஸ்வரூபம் தர்மம். தர்மம் என்பது கேவலம் சைதன்ய மாத்திரமானது. அங்கே த்வந்தம் இல்லை. தர்மம் என்பதும் அதர்மம் என்பதுமின்றி அது தானே தானாய்த்தன்மயமாய் ஸ்வயம்பிரகாசமாய் இரண்டற்று விளங்கிக்கொண்டிருக்கிறது. அந்த சேதனப்பொருளுக்கு அசேதன சம்பந்த முண்டாவதினாலேயே அதற்கு

விர்த்தி க்ஷய லயமுதலிய அவஸ்தாத்திரயங்கள் ஏற்படுகின்றன. தர்மம் நசித்தால் சேதனம் நசித்ததுபோல் ஆகிறது. சேதனம் முற்றுமொடுங்கி அசேதனமே மேலிட்டு விளங்கினால் அப்பொழுது அறிவென்பதே யற்றுப்போவதால் ஒழுங்கும் அற்றுப்போகிறது. அதைத்தான் நமது சாஸ்திரங்கள் பிரளயகாலமென்று சொல்கிறது. சேதனம் அழியாவஸ்துவாதலால், அது முற்றும் ஒடுங்குவதால் உண்டாகும் மஹாப்பிரளயகாலம் வந்ததும், கடவுள் ஆபதோத்தாரண மூர்த்தியா யவதரித்து மறுபடியும் ஒழுங்குபட எல்லாவற்றையும் சிருஷ்டிக்கிறார். பகவத்கீதையில் பகவான் அர்ச்சுனனுக்குச்செய்த உபதேசத்தின் மர்மம் இதுவே. இதற்குமேல் தத்துவதரிசனமில்லாதவர்களுக்கு இதனுண்மையை விளக்கிச்சொல்லல் சாத்தியமில்லை. சொல்லும்படி பகவான் யாருக்கும் அதிகாரம் கொடுக்கவுமில்லை.

**“யுகாந்தர” ஸெடிஷன்கேஸ்.**

இதைப்பற்றியேன் இவ்வளவு விஸ்தரித்துச் சொன்னேனென்றால், இக்காலத்தில் தத்துவத்தை யுணர்ந்தவர்கள் யாருமில்லை யென்பது பாமர ஜனங்களின் கொள்கை. தாடி மீசையும் தலையில் ஜடையும் மற்ற வெளிச்சின்னங்களு முடையவர்களே தத்துவத்தையுணர வல்லவர்கள் என்னும் ஒருவித தப்பெண்ணமிருக்கிறது! அது தப்பென்பது நமது கொள்கை. ஆனால் சாமான்ய ஜனங்கள் அதை யெளிதில் ஒப்புக்கொள்ளார்கள். தத்துவத்தை யனுஷ்டிக்கிறவர்கள் பிறர் ஒப்புக்கொள்ள வேண்டுமென்றும், தங்களுக்குப் புகழ்வேண்டுமென்றும் எதையும் செய்யமாட்டார்கள். அவர்கள் நடத்தையே தனி. அதை தத்துவதரிசிகளன்றி மற்றவருணரார். அவர்கள் நடத்தைக்குக்காரணம் அந்தக்கரணத்தில் தேடவேண்டும். தத்துவதரிசிகளின் அந்தக்கரணம் நிர்மலமாயிருக்குமாதலால், அங்கேயெல்லாம் கண்ணாடி முன்போல் பிரதிபிம்பித்துக்காட்டும். இந்த உண்மையை அறிவோர் எப்போதும் அபூர்வமாயினும் இக்காலத்தில் அனேகர் இருக்கிறார்களென்பது நமது அனுபவசித்தாந்தம். வேணுமென்று உலகவியவகாரங்களைவிட்டு, உலக ஆரவாரங்களி லகப்பட்டுக்கொண்டுழலாமல், தங்கள் சற்சீஷர்களையன்றி வேறுயாரும் அறியாமல் உலகுக்கு உண்மையாயுழைக்கிறவர்களைப்பற்றி நாமிங்கு பேச நமக்கு அதிகாரமில்லை. ஆனால் பத்திரிகைக் கெழுதிவருகிறவர்களனேகர் வார்த்தைகளையும் அவர்கள் செய்கைகளையும் துரீயநிலையிலிருந்து தூக்கிப்பார்த்தால் “கலிமுத்திவிட்டது” என்பதற்கு அடையாளங்கள் எத்தனையோதோன்றுகின்றன. “கலிமுத்திவிட்டது” என்றால் என்ன? பஹிர்முக விசாரணைமேலிட்டால் அசேதனப் பொருளை யாராய்ந்து தேர்ந்த அதிகூர்மையான புத்தியானது தன்னைத் தானறிந்து கொள்ளும் காலம் கிட்டிவிட்டது என்பது பொருளாம். நித்தியாநித்தியவஸ்து விவேகமின்றி, அநித்தியவஸ்துவே சதமென்றுன்னி அந்த வழியில் ஏகாக்கிர சித்தராய் ஆராய்ச்சிசெய்து கொண்டுபோனால், விசாரணை முடிவில் என்னதோற்றும்? “அநித்தியவஸ்துவே சதம் என்று பாவித்தபாவனை தப்பு என்றும் அநித்தியவஸ்து அநித்தியமானதேயென்றும்” ஏற்படும். குருகடாக்ஷத்துக்குரியகாலம் இதுவே. இவ்வுலகெங்கும் பேர்பெற்ற ஸ்வாமி விவேகாநந்தர் தம்பி பூபேந்திர நாததத்தர் என்பவர் கல்கத்தாவில் “யுகாந்தர்” என்று ஒரு சுதேச பாஷாப்பத்திரிகை பிரசுரித்துவந்தார். அங்கே உத்யோகஸ்தர்களுக்கும் ஜனங்களுக்குமுள்ள மனவேற்றுமை விசேஷமாய் வளர்ந்து விகாரமாய் விளங்கிவருவது யாவருக்கும் தெரிந்த விஷயம். இவரைப்போல் இன்னுமனேகர் அரசியல் தர்மத்தையுணர்ந்தவராய் அந்தந்த விஷயத்தில் அவர்கள் மனச்சாக்ஷிக்குச் சரியென்று தோன்றியதை வரும் விலங்கங்களுக்கஞ்சாமல் அனுசரித்து வருகிறதாகத் தெரிகிறது. இதையறிந்த உத்தியோகஸ்தர்களும் அவர்கள் பேரில் மிகவும் கண்ணாயிருந்து வருகிறார்கள். பெங்கால் கவர்ன்மெண்டார் இவருக்கும் இன்னும் சிலபத்திராசிரியர்களுக்கும் அவர்கள் எழுதி வருவது சர்க்காருக்கு விரோதமாக விருப்பதால், அப்படி செய்யாதபடி எச்சரிக்கைசெய்து அவர்களை உஷாராயிருக்கும்படி நோட்டீஸ் கொடுத்து வந்தார்கள். “சித்தன்போக்கு சிவன்போக்கு”—“பித்தன்போக்கு பேய்ப்போக்கு” என்றொரு பழமொழியுண்டு. சித்தன் கடவுள் காட்டினதே வழியென்று செல்வானானால் பித்தன் “பேய்த்தேர்” என்று சொல்லப்பட்டதனது அடங்காமனமாம் ‘மாயப்பேய்’ காட்டினதே வழியென்று செல்வான். இருவரும் உயிருக்குத் துணிந்து தாங்கள் போனதே போக்கு என்று போகிறவர்களாதலால் பித்தனுக்கும் சித்தனுக்கும் வித்தியாசம் கண்டு சொல்வது கஷ்ட சாத்தியமென்பதையுணர்ந்து “சித்தனோ பித்தனோ” என்று இருவரையும் ஒரு கூட்டிலடைத்துப் பேசுவது வழக்கம். அந்த வழக்கத்தை யொட்டியே நாமும் இவர்கள் சித்தர்கள் தானோ அல்லது வெறும் பித்தர்களோ அறியேம்! ஆனால் இவர்கள் போனதே போக்காய் தங்கள் மனதுக்கும் மனச்சாக்ஷிக்கும் உண்மையென்றும் உரியதென்றும்பட்டதைக்கொண்டு தங்கள் கடமையைச் செய்துகொண்டு போனார்கள். இவர்கள் போனதே போக்காய்ப் போவதைக்கண்டு இவர்கள் சமர்த்தைப்பார்ப்போமென்று யுகாந்தர் என்னும் பத்திரிகையில் அதன் ஆசிரியர் சர்க்காருக்கு விரோதமாக எழுதினாரென்று இ. பி. கோட் 124-A. பிரிவின்படி அவர்பேரில் வாரண்டு விட்டுப்பிடித்து கல்கத்தாப்ரெஸிடென்ஸி மாஜிஸ்திரேட்டு முன்னிலையில் குற்றஞ்சாட்டி விசாரணைசெய்தார்கள். ஸ்ரீ பூபேந்தர நாத தத்தர் அவர்கள் விசாரணை காலத்தில் மாஜிஸ்திரேட்டு இந்தக் குற்றசச்சாட்டுக்கு என்ன ஜவாப் சொல்லுகிறீர் என்று கேட்டதற்கு பூபேந்திரர் தன் பேருக்குச் சரியாகவே சிறிதும் அஞ்சா நெஞ்சினராய், நான் என் ஸ்வதேசத்

துக்குச் செய்யவேண்டிய கடமையை மனச்சாக்ஷி சம்மதமாய்ச் செய்தேன். இனி உமது இஷ்டம் போல் கேஸை நடத்தி முடிக்கலாமென்று சொல்லி மௌனமாயிருந்து விட்டார். மாஜிஸ்திரேட்டும் விசாரணைசெய்து அவரை ஒருவருஷம் கடினக்காவலிருக்க தண்டனைவிதித்து அந்தப்பத்திரிகை அச்சிடப்பட்ட "சாதன" அச்சுக்கூடத்தை சர்க்காருக்குச் சொந்தமானதாகப் பிடித்துக்கொள்ளும்படி உத்தரவு செய்தார். பூபேந்த்ரநாத் "புன்சிரிப்புத் தவழு மவர் இன்பமுகம்" கோணமல் ஜெயிலுக்குப் போனாரென்று பத்திரிகைகள் மூலமாய்ப் பார்த்தவர்கள் சொல்லத் தெரியவருகிறது. இவர்நடத்தை அதிசயமா யில்லாவிட்டாலும் அசாதாரணமானது என்பதிற் சந்தேகமில்லை. இவருக்கு விதித்த கடுந்தண்டனையைக் குறித்துப் பலர் பலவாறு அபிப்பிராயப்பட்டுப் பத்திரிகைகளி லெழுதிவர, "இந்தியன் ஸோஷியல் ரிபார்மர்" என்னும் பத்திரிகை யெழுதினதுமட்டும் நமக்கு விசேஷமாகப்பட்டுள்ளது. "என் கடமையை நான் செய்தேன் உன் கடமையை நீ செய்யலாமென்று சொன்னவரை மாஜிஸ்திரேட்டு தன் கடமையைச் செய்துமுடிப்பான் ஒரு வருஷத்துக்கு மண் சுமக்க அனுப்பினர். இதில் யார் யாரைக்குற்றம் சாட்டுகிறது! செய்கடன் செய்வார் கடனோடு கடன் முரண்டால் புருஷப் பிரயத்தனம் நழுவிப் பிரளயத்தில் விழுந்து மூழ்கிப் போகிறது. பிரளயத்தையும் புனர் சிருஷ்டியையும் சரிதப்பென்று வாதித்து நிர்ணயிக்க வல்லார் யார்?" என்று கேட்கிறது. ஸ்ரீகிருஷ்ணபகவான் சண்டை முகத்தில் தேர்த்தட்டிலிருந்துகொண்டு சோகமுற்ற அர்ச்சுனனுக்குப் போதித்த போதனையின் மர்மம் இதுவே. "செய்கடன் திருந்தச்செய்"— "வருவன வந்தேதீரும்; போவன போகவே போகும்!" "கர்மத்தைச்செய்ய உனக்கு அதிகாரமேயன்றி அதின் பலன் உனக்கில்லை: அதை நான் கிரகித்துங்கிரகிக்காமல் கிரகிக்கிறேன்" என்றார். வருவன போவனவற்றை யறியவல்லவன் அந்தக் கபட நாடக சூத்திரதாரன் ஒருவனே. அவனையுண்மைப்பக்தி யோடு பஜிப்பவர் அவனிலும் வேறில்லையென்று பகவான் தானே சொல்லியிருப்பதால் அந்த ஒருவனில் எத்தனைபேர்களடங்கி யிருக்கிறார்களோ! யார் சொல்லவல்லார்!

**பஞ்சாப் ஸெடிடின் கேஸ்.** பஞ்சாப்பில் பிரசுரமாகும் "இந்தியா" என்னும் பத்திரிகை சர்க்காருக்கு விரோதமான விஷயம் பிரசுரம் செய்ததற்காக அப்பத்திரிகையின் ஆசிரியரான மிஸ்டர் பிண்டிதாஸ் என்பவர் 5-வருஷத்துக்கு மண் சுமக்கத்தண்டனை விதிக்கப்பெற்றார். அவரோடு அப்பத்திரிகையை அச்சிட்டுக்கொடுக்கச் சகாயமாயிருந்த மிஸ்டர் தீனநாதருக்கும் 5-வருஷம் கடினக்காவல் கிடைத்தது. இன்னம் இப்படி எத்தனையோ கேஸ்கள் நடிந்து வருகின்றன.

**காகினடா கலகக்கேஸ்.** காகினடா கலகக்கேஸ் நடந்து வருகிறது. அதில் சம்பந்தப்பட்டவர்கள் தண்டனையடைவது நிச்சயம். இக்கால விசேஷத்தைப்பார்த்தால், இப்பொழுது குற்றஞ் சாட்டி மாஜிஸ்திரேட்டு முன் போகிறவர்கள் கறுப்புத்தோலுள்ளவர்களானல் தண்டனையில்லாமல் தப்புவது துர்லபம் என்று ஜனங்கள் எங்கும் சொல்லிக்கொள்கிறார்கள்.

**டாக்டர் கெம்ப் கேஸ்.** காகினடாவில் ஒரு பையனையடித்துக்குத்துயிராக்கின தாகச் சொல்லப்படும் டாக்டர் கெம்ப் பேரில் கொண்டுவரப்பட்ட வியில் நஷ்டப்பிராது காகினடா டிஸ்திரிக்ட் முனிசீப் கோர்ட்டில் விசாரணையாகி வருகிறது.

**தண்டப்போலீஸ் கேஸ்.** காகினடா தண்டப்போலீஸின் தலைவரான மிஸ்டர் அட்கின்ஸன் அப்போலீஸைச்சேர்ந்த இரண்டு மூன்று கான்ஸ்டேபிள்கள் தன்னைக்கொன்றுவிடப்பார்த்ததாகக்கொண்டுவந்தகேஸ் மாஜிஸ்திரேட்டு முன்னிலையில் விசாரணையாகி ஸெஷன் கோர்ட்டில் இப்பொழுது விசாரணை நடந்துவருகிறது.

**மார்லிமெந்தில் கேள்விகள்.** பார்லிமெந்தில் லாலா லஜபதிராய் அவர்களைப்பற்றி யடிக்கடி மெம்பர்கள் கேள்வி கேட்டுக்கொண்டே யிருக்கிறார்கள். மிஸ்டர் லஜபதிராய் அவர்கள் தான் 1818-வது வரு 3-ம் ரெகுலேஷன்படி தண்டிக்கப்படத்தக்க குற்றம் யாதொன்றும் செய்யவில்லை யென்று விண்ணப்பம் செய்துகொண்டு அந்தமனுவை மாக்ஷிமைதங்கிய சக்ரவர்த்தியவர்கள் இராஜசமுகத்திற் கனுப்ப வேண்டுமென்று இந்தியா கவர்ன்மெண்டுக் கெழுதியிருக்கிறாரென்று மிஸ்டர் மார்லி காமன்ஸ் சபையில் சொன்னர். மிஸ்டர் மார்லி இந்தியாவுக்குபோய் வந்தால் நல்லதென்று ஒரு மெம்பர் சொன்னதற்கு அவர் முடியாதென்று சொல்லிவிட்டார்.

**மிஸ்டர் கெயர் ஹார்டி.** மிஸ்டர் கெயர் ஹார்டி என்னும் பார்லிமெந்து சபை மெம்பர் உலகைச் சுற்றிப்பிரயாணம் செய்ய உத்தேசித்து இந்தியாவுக்கும் விஜயம் செய்யப்போகிறார். அவர் பார்லிமெந்து சபையிலுள்ள உழைப்பாளிகள் கக்ஷிக்குத்தலைவர். இந்தியாவில் நடக்கும் அநியாய அக்கிரமங்களைப்பற்றி அவர் நேரில் விசாரித்து சீமையில் கைவேலை செய்தும் மற்றப்படி யுழைத்தும் பிழைப்பவர்கள் முற்றும் ஹிந்துக்களிடத்து அனுதாபமுடையவர்களாயிருக்கிறார்களென்றும் பார்லிமெந்துசபையிலுள்ள அவர்கள் கக்ஷியார் இந்தியாவுக்கு ஸ்வயஅரசாக்ஷி அளிக்க அனுகூலமாயிருக்கிறாகளென்றும் சொல்லப்போவதாகச் சொன்னர். அதன்பேரில் அவர் இங்கே வந்தால், அவரையும் பிடித்து லஜபதிராயை யனுப்பியதுபோல் தூர தேசத்துக்கனுப்பிவிட வேண்டுமென்று வெள்ளைக்காரர் பத்திரிகைகள் தாறு மாறாய் எழுதி வருவது நகைப்புக்கிடமாயிருக்கிறது! அவர்மேல் கைபோட்டால் இராஜப்பிரதிநிதிமுதல் எல்லாரும் இந்தியா மந்திரியுள்பட சந்தியில் நிற்க வேண்டிவரும்!

## Extract.

## லாலா லஜபதிராய்.

### அவரது ஜீவசரிதை.

(நாட்டுப்புறப் பத்திரிகள் அபிப்பிராயம்.)

——:*:——

புவியெலாம் புகழ்பெற்றுத் தேசாபிமானம் வாய்ந்தவள்ளலென்று நம்மிந்தியரால் கொண்டாடப்படுவது ஒருபுறமிருக்க, மற்றோர் புறத்தில் "ராஜாங்கக்கைதி" யென்று இந்தியா மந்திரியின் அபிப்பிராயத்திற்குட்பட்ட ஸ்ரீயுத லாலா லஜபதிராயைத் தேசபரிஷ்காரஞ் செய்த கவர்ன்மெண்டார் மாண்டலே கோட்டையிலுள்ளதொரு கிரகத்தில் அந்நாரைக் கொண்டுபோய் வைத்திருப்பது நம்மவரெல்லோருக்குந்தெரிந்த விஷயம். எங்குபார்த்தாலும் கண்டனக் கூட்டங்களே நிரம்பியிருக்கின்றன. அநுதாப வுணர்ச்சியே மேலெழும்பி நிற்கின்றது. இந்தியாவிலுள்ள 33-கோடி ஜனங்களின் நன்குமதிப்புக்குப் பாத்திரராயுள்ள லாலா லஜபதிராயைக்குறித்து நமது நேயர்கள் படிக்க விரும்புவார்களென்று நினைத்து அவரது ஜீவித சரிதையைச் சுருக்கமாய் இங்கு எடுத்தெழுதி யிருக்கிறோம்,

### பூர்வோத்திரம்.

சுமார் 42-வருஷங்களுக்குமுந்தி ஸ்ரீயுத லாலா லஜபதிராய், அதாவது 1865-வது வருஷத்தில் பிறந்தவராவர். அவரது அருமைத்தந்தைக்கு ஒரு கவர்ன்மெண்டு பாடசாலையில் உபாத்தியாயர்வேலை. தம் புதல்வர் படிக்கவேண்டுமென்ற பேராசை தந்தைக்குப் பெரிதும் இருந்ததற்கிணங்க குழவிப்பருவத்திருந்தே லஜபதிக்குக் கல்விபயிலுவிப்பாராயினர். பரிபூரணமாயிற்று. மாணவராயிருக்குங்காலத்தில் லஜபதிக்குத் தேகசௌக்கியம் அவ்வளவாக திருப்தியுடனிராதிருந்ததோடு நிலைமையும் கொஞ்சம் பேதப்பட்டிருந்ததனால் கல்விக்குக் கொஞ்சம் குந்தகம் உண்டானாலும் படிப்படியாய்ப் பயிற்சி முற்றுகையில் லஜபதி புத்தியில் முதுமையடைந்து வந்தார். இறுதியில் அவரது சாமர்த்தியத்திற்கு மெய்ச்சிச் சர்வகலா சபையாரும் உபகாரச் சம்பளம் கொடுத்துதவ முற்படலாயினர்.

### அவருக்கு வாய்ந்த சக்தி.

இரண்டு வருஷகாலம் யூனிவர்ஸிடியார் கொடுத்த ஸ்காலர்ஷிப்பில் (உபகாரசசம்பளத்தில்) படித்து பஞ்சாப் மகாணத்திலுள்ள லாகூர் கவர்ன்மெண்டு கலாசாலையில் திறமையுடன் கல்வி கற்று சட்டப் பரீக்ஷையில் முதல்தடவையாகத் தேறினர். அவருக்கப்போது வயது 18. அவ்வயதிலேயே சட்ட விவகாரங்களை மதியூகத்துடன் உணருவதும், சமயோசிதமாய்ப் பேசுவதுமாயிருந்த லஜபதிராயைக் கண்டோர் மிக்க மனமகிழ்ந்து இவர் ஒரு நாளில்லாவிடில் ஒரு நாள் கைதேர்ந்த வாசாஞானமுள்ள கீர்த்திவானவர் என்று சொல்லிக்கொண்டு வந்தார்கள். அவர்கள் சொன்னதற்கிணங்க இரண்டு வருஷங்களுக்குப் பிற்பாடு கடைசிச்சட்டப் பரீக்ஷையில் தேறிவிட்டார். அப்பரீக்ஷைக்கு ஆஜராய்த்தேறிய 30 மாணவர்களில் நம் லஜபதியே இரண்டாவதாய்த் தேறினர். பஞ்சாப் மகாணத்திலுள்ள ஹிஸ்ஸார் எனும் பட்டணத்தில் வக்கீலாய்க் கோர்ட்டில் ப்ராக்டிஸ் செய்துகொண்டிருந்து பின்னர் அங்குள்ள எல்லா வக்கீல்களுக்கும் தலைமையாய் விட்டார். ஹிஸ்ஸார் முனிசிபல் போர்டின் கௌரவக் காரியதரிசியாயும் 3வருஷகாலமாயிருந்து பின்னர் 1892-வது வருஷத்தில் லாகூர் சீப் கோர்ட்டுக்கு வந்து பிராக்டிஸ் செய்யலாயினர்

### அவரது அபிமான மகத்துவம்.

லாகூர் சீப் கோர்ட் டென்பது பஞ்சாப்மாகாணம் முழுவதுக்குமே ஐகோர்ட்டென்று சொல்லும்படியா யிருக்கிறபடியால் அதனில்வந்து பிராக்டிஸ் செய்யும் வக்கீல்கள் சாதாரணமாகவே மதியூகம் படைத்தவர்களா யிருப்பதற்கு ஆக்ஷேபனையில்லை. லஜபதியும் அங்கு போய்ச்சேர அவரிடம் ஹிஸ்ஸாரி லிருந்ததுபோலவே தனலக்ஷ்மி தாண்டவமாடலாயினள். இவ்விதமாக அவருக்கு எல்லாவிதத்திலும் சீரும் சிறப்பும் பேரும் பெருமையும் கீர்த்தியும் புகழும் பிரபலித்து நிற்கையில் அதிக வேலைத்தொந்தரவினால் சரீர சுகத்திற்குக் கொஞ்சம் தீங்குவிளையும் போலிருந்தது. அதோடு கூட தான் ஜனித்த தேசத்து க்ஷேமாபிவிருத்தியில் கவனஞ்செலுத்தவேண்டுமென்பது அவரது விரதமாயிருந்தபடியால் தனது வக்கீல் உத்தியோகத்திற் சிறிதளவு பரித்தியாகம் செய்யவேண்டி வந்தது. அதல்லாமல், தமக்குக்கிடைக்கும் பணத்துள் பெரும் பாகத்தை தேசாபிவிருத்திக்குரித்தான வழியிலேயே செலவழிக்கவேண்டுமென்று தாம் பிரதிக்ஞை செய்திருப்பதாயும் அறிகிறோம்.

### அவருக்கு ஆரிய ஸமாஜத்திலிருந்த ஆசக்தி.

1882-வது வருஷத்தில் அதாவது அவரது 17-வது வயதில் அவர் வட இந்தியாவின் கண் மிகவும் பிரபலமாய் ஏற்பட்டிருந்த ஆரிய ஸமாஜத்தில் மதசாம்பிரதாய முறைகளையும் ஆசாரச் சீர்த்திருத்தாம்சங்களையும் செவ்வனே யுணர்த்தி அவ்விரண்டினுள்ளும் எந்தெந்த மாதிரி விதிகளை யநுஷ்டிக்கவேண்டுமோ அந்தந்த மாதிரி யநுஷ்டித்து ஒருவிதமான திருத்தத்தை முன்னிடவேண்டுமென்றார். இந்த ஸபையில்தான் லஜபதி உள்ளும் புறமுமாயிருந்து உழைத்தார். இப்போது ஆரிய ஸமாஜத்தலைவரென்று ஜனங்கள் அவரைச்சொல்லவேண்டுமென்றால் அவர் எவ்வாறு அந்த ஸமாஜத் திற்காகப் பாடுபட்டிருக்க வேண்டுமென்பதை நமது நேயர்களே ஊகித்துணரட்டும். லாகூர் ஆரிய ஸாமஜ எச்ஸிகியூட்டிவ் கமிடியின் மெம்பராய் அவர் இருப்பதோடு, பஞ்சாப், சிந்து பலுசிஸ்தானம் இவ்விடங்களிலுள்ள ஆரிய ஸமாஜிகளின் நிருவாக ஸபை மெம்பராகவும் இருக்கவேண்டுமென் றவரைப் பலர் கேட்டுக்கொண்ட

னர். இதனாலேயே அவருக்கு ஆரிய சமாஜத்தில் ஆசக்தி மிகவுண்டென்று தலையங்கத்தில் சொன்னோம்.

### அவரது கல்விப்பயிர்ச்சி.

கல்வியிற் கரைகண்டவரென்று பொதுவாய்த் தமிழில் வழங்குவதுபோல் லாகூருக்கு லஜபதிராய் பெருத்த கல்வியாளராகவேயிருந்தார். கல்வி வாசனை யறியாத மூடர்களுக்குக் கல்விப்பயிற்சி செய்விப்பதில் அவர் மிக்க தீரர். லாகூரில் தயாநந்த ஆங்கிலோ வேதிய கலாசாலை யென்றொன்றுண்டு. திரளான மாணவர்கள் அக்கலாசாலைக்கு போய்ப் படிப்பதைப்போல் மற்றெங்கும் போவதில்லை. அக்கலாசாலைக்கு நன்கொடையாகச் சேர்ந்த 5-லட்சம் ரூபாயில் பெரும்பாகத்திற்கு லஜபதிராயே காரணபூதராயிருந்தார். பின்னும் அதற்கு வைஸ் பிரெஸிடெண்டாகிப் பத்துப் பன்னிரண்டு வருஷங்களுக்குக் கௌரவக் காரிய தரிசியாயுமிருந்தார். பல தடவைகளில் மாணவரது மனதில் தாம் சொல்வது நன்றாய்ப் பதியவேண்டுமென்று சரித்திரத்தைக் குறித்து உபந்நியசித்திருக்கிறார். தம் கைப்பணத்திலேயே பெரும்பாகம் அக்கல்லூரிக்காகக் கொடுத்திருப்பதுடன் ஜல்லந்தரிலுள்ள ஆங்கிலோ சமஸ்கிருதபாடசாலையில் காரியதரிசியாயிருந்து அனேக விடங்களிலிருக்கும் ஆரிய சமாஜ பள்ளிக்கூடங்களின் மெம்பராயுமிருந்தார். அவரது கல்விப்பயிற்சியினாலேயே அவருக்குப் புறதேசப் போகச் சமயமும் வாய்த்தது

### அவரது புறநாட்டுப் பிரயாணம்.

முதன் முதல் அமெரிக்காவுக்குப் பிரயாணம் போய் அங்குள்ள அனேக கல்லூரிகளின் நடவடிகளை நேரில்பார்த்து இந்தியாவுக்கு அந்நடவடிகளில் ஏதாவது உபயோகப் படுவதாயிருந்தால் அம்முறைகளை வெகு கவனமாய்க் குறித்துவந்தார். லார்டு கர்ஸன் ராஜப்பிரதிநிதியா யிருந்தபோது ஏற்படுத்திய ஸர்வகலா சபைகளைப்பற்றிய விசாரணை கமிடியில் லஜபதிராய் வாக்குமூலங்கொடுத்தார். அதனாலேயே அவர் கல்வியாளர் என்பதற்கு வேறு அத்தாக்ஷி வேண்டுவதில்லையல்லவா? பின்பு காங்கிரஸ் டெலிகேட்டாக இங்கிலண்டிற்குச் சென்று ஸ்ரீ கோபால் கிருஷ்ணகோகலேயொருபுறமும், லஜபதி யொரு புறமுமாய் நின்று பிரிட்டிஷ் மகாஜனங்களில் மனதில் இந்தியஞானம் ஊட்டுவித்ததன் ஞாபகத்தை மறந்துவிட இன்னும் நமக்குக் காலம் வந்துவிடவில்லை.

'பரோபகாரார்த்தம் இதம் சரீரம்'

என்ற வடமொழிவாக்கியத்திற் கேற்றபடியே லஜபதிராய் பிறருக்கு உழைக்கவேண்டுவதற்காக தாம் இந்த நரசரீரத்தைப் பூண்டதாகவும், அதனையே தம்முதற்றொழிலாய்த் தாம் பாற்க வேண்டுமென்பதாகவும், அவர் அடிக்கடி சொல்வதுண்டு. "சொல்லுவதார்க்கு மெளிது அரியவாம் சொல்லிய வண்ணஞ்செயல்" என்ற திருவள்ளுவ நாயனாரது வாக்குப்பிரகாரம் உலகத்தினியல்பு இருந்தாலும் லஜபதிராய்மட்டும் தாம் மனதிற்கொண்ட பரோபகாரசிந்தையை மறந்தவரல்லர். வடஇந்தியாவிலுள்ள பெருத்த இந்து ஆரிய சமாஜ அனாதைக் குழந்தைகளுக்கான கல்லூரியின் பொதுக் காரியதரிசியாய் லஜபதிராய அனேகவருஷகாலமிருந்தனர். அப்பாடசாலையில் 300 அனாதைக் குழந்தைகளுக்கு அதிகமாகவே படித்துவந்தார்கள். பின்னும் மீரத்நகரத்திலுள்ள வைசிய அனாதைகளுக்காக விருந்த பாடசாலை மானேஜிங் கமிட்டி மெம்பராயிருந்தார். 1897-ம் வருஷத்திலும் பெற்றோரையிழந்த அனாதை இந்துக் குழந்தைகளின் கஷ்டநிவாரணத்திற்காக அவர் முயற்சித்து 2000 குழந்தைகள் வரை காப்பாற்றினர். 1901-ம் வருஷத்தில் பஞ்சம் பீடித்தமாகாணங்களைத்தாமே நேரிற் சென்று பார்த்து பஞ்சநிவாரண கமிஷனில் வாக்குமூலமுங்கொடுத்தார். 2-வருஷங்களுக்கு முன்னர்க் காங்க்ரா ஜில்லாவில் பூகம்பமானபோது லாகூர் ஆரிய ஸமாஜத்திற்காக அவர் ஒரு பூகம்பச் சேத நிவாரண நிதி ஸ்தாபித்துழைத்தார். அந்நிதியிற் சேர்ந்த பணம் சரிவர நிருவகிக்கப் படுவதைக்குறித்துத் தாமே சிரத்தையெடுத்துக்கொண்டார்.

### அவரது விவகார சக்தி.

விவகாராதி விஷயங்களில் அவர் விமரிசை கொண்டவர். லாகூரிலுள்ள பெருத்த சுதேசநிதிகளுக்குள் தலைமையாயிருக்கும் பஞ்சாப் நாஷனல்பாங்கின் டைரெக்டராயிருந்தவர். இதன்றி பஞ்சாப் மாகாணத்திலுள்ள பஞ்சாலைகளிலும் அவருக்கு ஆர்வமதிகமுண்டு. இந்தியச் சீர்திருத்தக்காரரென்று பெயர்பெற்ற பண்டித குருதத்தவித்தியின் ஜீவித சரிதையை யெழுதினவர் இவரே. தேச பாஷையிலும் மாஸீனி, கரிபால்டி, சிவாஜி, சுவாமிதயாநந்த, ஸ்ரீகிருஷ்ணன் முதலினோரது அற்புதசெயல்களை விவரமாய் எழுதி யுள்ளார். இந்து நாகரிக முறைகளைப்பற்றியுமவர் எழுதாது விட்டுவிடவில்லை. அனேக வருஷகாலம் தேசபாஷாப் பத்திரிகை யொன்றிற்கு ஆசிரியராயிருந்து வந்தவர் 1888-வது வருஷத்தில் அலஹாபாத்தில் மீடிங்கான போது தான் லஜபதி இந்தியன் நாஷனல் காங்க்ரெஸுடன் சேர்ந்துழைக்கலானர். தேஹி என்றவர்க்கு நாஸ்தி என்னாதவர். 42-வருஷ காலமாய்ப் புவியில் பாடுபட்டுத் தமது கருமமென்று ஒவ்வொன்றையும் கருதுமிவர் தற்போது தேசப்ரஷ்டத்தின் வாயகப்பட்டு மாண்டலே கோட்டையிலுள்ளசோர் கட்டிடத்தில் தனியே காலங்கழிக்கிறார். நவத்துவாரங்களோடு கூடின புழுக்கூடான பூதவுடல் எங்கிருந்தாலும் அவரது ஆத்துமாவானது சூக்ஷமமாய் ஆயிரம் பாடு அரும்பாடுபட்டுப் பெற்ற அன்னையாம் பாரதமாதாவை ஸ்மரித்துத் தெரிசித்தவாறிருக்குமென்பது திண்ணம்.

---